# பாரதி வழி

ப. ஜீவானந்தம்



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை - 600 098.

# முன்னுரை

தோடி உன்னதமான ராகம்தான்; எனினும் அதை நுகர்ந்து இன்புறுவதற்கு ஒரு அரியக்குடியார் நிச்சயமாகத் தேவைப்படுகிறாரல்லவா?

பாரதி ஒரு மகாகவி; எனினும் அவரை முற்றும் உய்த்துணர்வதற்கு ஒரு ஜீவா தேவைதானே?

தமிழன்னையின் தொலைநோக்கு அளவிடற்கரியது. தமிழனின் அதிர்ஷ்டமும் அப்படியே. ஒரே சகாப்தத்தில்—நாடு விடுதலைபெற வீறுடன் இயக்கம் நடத்திவந்த ஒரே சகாப்தத்தில்—ஒன்றன் பின் ஒன்றாக இரு மாமணிகள் தமிழனுக்கு வரப் பிரசாதமாக வாய்த்தன.

உள்ளத் தூய்மை; கூரிய அறிவு; மக்கள் மேல் தீராக் காதல்; நாட்டுத் தொண்டுக்குத் தூண்டிய நாட்டுப் பற்று; புதிய புதிய உண்மை, புதிய புதிய இலட்சியம் தேடிச் செல்லும் தீரா வேட்கை; உலக அறிவு அனைத்தையும் கண்டு அதற்கப்பாலும் ஏதாவது உண்டா என்று துருவியாராயும் விரிந்த நோக்கு; வீறு நிறைந்த சொல்; வீரம் நிறைந்த செயல்; தன்னுணர்வற்ற எளிமை; தனி மனிதனைத் தோழன் எனக் கொள்ளும் எளிமைப் பண்பு—எல்லாம் இவ் இருவருக்கும் பொதுவாயமைந்த சிறப்பியல்புகள். எனவேதான் எவ்விதமான வக்கிரமோ, வில்லங்கமோ இன்றி ஒருவருள் மற்றொருவர் கலந்து ஒன்றிப் போயினர்.

பாரதி இன்றி ஜீவா இல்லை; ஜீவாவின் விளக்கம் இன்றிப் பாரதி இல்லை.

இந்நூலில் காணும் மூன்று கட்டுரைகளையும் வாசிப்போர் இக்கூற்றில் மெய் இருப்பதை ஒப்புக் கொள்வார்கள்.

ஒப்புக்கொள்ளாமற் போனலும், மனத்திரையிலே இருவரையும் நிறுத்தி, இருவரிலும் விளக்கமாகத் தெரியும் ஒருமையம்சங்களை ஓர்ந்து வியந்திடுவார்கள்.

ஜீவா மறைந்து ஓராண்டு கழிந்துவிட்டது. அவர் நினைவாகத் தமிழ் மக்கள் விழா எடுக்கும் இந்நாளன்று இக் கட்டுரைகளை வெளியிட்டு எங்கள் உளங்கனிந்த அஞ்சலியைச் செலுத்துகிறோம்.

சென்னை,<br>18-1-64.

பதிப்பகத்தார்.

## பொருளடக்கம்

# பாரதி வழி

சுதந்திரம் வந்துவிட்டது, பாரதி கண்ட கனவு நனவாகி விட்டது என்று எழுதாத பத்திரிகை இல்லை, பேசாத மக்கள் இல்லை இன்று. எந்தப் பக்கம் திரும்பினாலும் கேட்கிறது "சுதந்திரப் பள்ளு."

பாரதியை, அவர் வாழ்ந்த காலத்தில் அனேக வைதீக விமர்சகர்கள், தற்கால நல உரிமைகளைக் குறிக்கோளாகக் கொண்டே கவி புனைந்திருக்கிறார் என்று குறைகூறினர்.

இலக்கணம் அறியாத கவிஞன் என்று, நன்னூல் பண்டிதர்கள் அகம்பாவ வெறியில் வாய்க்கொழுப்போடு ஆதாரமின்றி அர்த்தமற்றுப் பேசினர். வெறும் தேசீயக் கவி என்று பலர் அவமதிப்போடு பார்த்தனர்.

பெண் விடுதலைப் பித்தன் என்று சிலர் ஆத்திரப் பட்டனர். கஞ்சாப் புலவன் என்று இளக்காரமாக ஏசினவர் களும் உண்டு.

அவர் காலஞ்சென்றபின், கொஞ்ச காலத்திற்கு முன் கூட, பாரதி மகாகவியா அல்லவா என்ற விவாதம் அமர்க்களப் பட்டது எழுத்தாளர்களிடையில்.

## மக்களின் முன்னோடி

"பாரதியா, பார்ப்பான்தானே?" என்று பழிக்கக்கூடிய தூய தனித்தமிழ்க் குருதி நரம்புகளில் பீறிட்டுப் பாய்கிற 'செங்குட்டுவன், வளவன், செழியன்' வழிவழி வந்தோரும் தமிழகத்தில் இல்லாமலில்லை.

பாரதி தேசீயக் கவியாக இருந்து, மகாகவியாக மாறி, புதுமைக் கவியாகப் பொலிந்து, புரட்சிக் கவியாகவும்,

பொது மக்கள் கவியாகவும் புகழ்மாலை சூட்டப்படுகிறார் இன்று. அன்று ஒதுக்கப்பட்டவர் இன்று துதிக்கப்படுகிறார்— மக்களின் அரசியல், பொருளாதார, சமூக அறிவு வளர்ச்சியின் விளைவாக.

பாரதியின் எழுத்துக்கள் நமது தேசீய இயக்கத்தின் பலதிறப்பட்ட போக்குகளை — நடமாட்டங்களையும் கருத் தோட்டங்களையும் — சிறந்த முறையில் படம்பிடித்துக் காட்டு கின்றன. ஒவ்வொரு தலைசிறந்த கலைஞனையும்போல் தன் காலத்தில் ஏற்பட்ட சமூக, அரசியல் மறுமலர்ச்சியையும் புது விழிப்பையும் கூர்மையாகக் கவனித்தான் பாரதி.

'நிகழ்கால நலன்களைப்பற்றித்தானே பெருமிதமாகப் பாடி யிருக்கிறார்' என்று, மதிப்பீட்டில் பாரதியாருக்குக் குறைவாக 'மார்க்' போடுகிறவர்களுக்கு ஒரு உண்மை விளங்கவில்லை. தற்காலிகமாகத் தோன்றும் அல்லது காட்சியளிக்கும் சமுதாய, அரசியல் பிரச்சினைகளுக்கு அப்பாற்பட்ட, நிரந்தர உண்மை களென்று சொல்லத் தக்கவைகள் ஒன்றுமில்லையென்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள்.

பாரதியின் பெருமை — தனிச்சிறப்பு — தேசீய இயக்கத் தின் மகத்துவத்தை அல்லது விரிந்த பரந்த தேசீய இயக் கத்தை — அதனுடைய பன்முகங்களிலும் கண்டதிலேயே அடங்கியிருக்கிறது.

அரசியல் சுதந்திரத்தைப் பற்றி அருமையாகப் பாடிய கவிஞன் என்றே, பொதுப்படையாக அடிக்கடி பாராட்டப் படுகிறான் பாரதி. அவனுடைய எழுத்துத் திருப்பணியில் ஒரு பகுதிதான் இது.

பாரதியைப் பற்றி அறிய வேண்டுமானால், தேசீய இயக்கம் பூராவையும், அதன் எல்லாத் துறைகளையும், சகல அம்சங்களையும் அதன் வலு, வலுவின்மைகளையும், இறுதியாக அது எத்திக்கை நோக்கி முன்னேறி வந்துள்ளதென்பதையும் அறிந்து தீரவேண்டும்.

ஒரேயடியாக, காலத்தைத் தாண்டி எந்த மனிதனும் வாழமுடியாது. எத்துணை தீர்க்கதரிசியாயினும் காலவரம்பு களை முற்றும் மீறிச் சென்றுவிட முடியாது. கவிஞனும் மனிதன் தானே! இந்த உண்மையை மறந்துவிடாமல் பாரதியை ஆராய்ந்தால், பாரதியின் பெருமை இன்னும் அதிகரிக்கும்.

## நாட்டன்பில் திளைத்த நல்லிசைப் பாவலன்

"ஆதிபகவன் முதற்றே உலகு"

என்று தொடங்கினான் வள்ளுவன்.

"அலகிலா விளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கே சரணங்களே"

என்று வணங்கினான் கம்பன்.

"............எங்கள்
மா நிலத்தாயை வணங்குது மென்போம்"

என்று பாரதி ஆரம்பித்தான்.

தெய்வ பக்தியின் இடத்தில் தேசபக்தியை ஏற்றிவைத்துப் போற்றி நின்ற முதல் தமிழ்க்கவி பாரதிதான்.

"நாட்டன்பில்லா நடைப்பிணம்" என்று "மனோன் மணீயம்" சுந்தரம் பிள்ளை கூறுகிறாராயினும்,

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனிசிறந்தனவே"

என்று தேசபக்திக்கு முதல் வரிசை அளித்தவன் பாரதியே.

"பாருக்குள்ளே நல்ல நாடு— எங்கள்
பாரத நாடு"

என்று போற்றி நாட்டன்பை மக்களிடம் தட்டி எழுப்பி,

"சொந்த நாட்டில் பரர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம்— இனி— அஞ்சிடோம்"

என்று ஆவேசக்கனலை மூட்டி,

"பாரத தேசமென்று பெயர்சொல்லுவார்—மிடிப்
பயங்கொல்லுவார் துயர்ப்பகை வெல்லுவார்"

என்று நம்பிக்கை ஊட்டுகிறான்.

## வீர சுதந்திரம் விரும்பினான்

தேச பக்தியை எழுப்ப, அடிமைத்தனத்தின் வெறுப்பை மூட்டுகிறான் :

"புல்லடிமைத் தொழில் பேணி—பண்டு
போயின நாட்களுக் கினிமனம் நாணி
தொல்லை யிகழ்ச்சிகள் தீர;— இந்தத்
தொண்டு நிலைமையை 'தூ'வென்று தள்ளி
வந்தே மாதர மென்போம்"

என்று நாட்பட்ட அடிமைத்தனத்தால் தடித்துப்போன தோலிலும் 'சுரீர்' என்று தைக்கும்படி சாட்டை கொடுத்து எழுப்புகிறான். "இளந்தமிழா! பள்ளி எழுந்தருளாயே" என்ற பாட்டுக் கேட்கிறது.

அடிமை வாழ்வில் அருவருப்பையும் ஆத்திரத்தையும் ஊட்டி,

"குப்பை விரும்பும் நாய்க்கே— அடிமை
கொற்றத்தவிசு முண்டோ?"

என்று ஆங்கிலேயன் மூலம் இந்தியனின்—தமிழனின் ஆத்திர நெருப்பில் எண்ணெய் வார்த்து, மான உணர்ச்சியைக் கிளறி,

"மானிட ஜென்மம் பெறுவதற் கரிதெனும்
வாய்மையை உணர்ந்தாரேல்— அவர்
ஊனுடல் தீயினும் உண்மைநிலை தவற
உடன்பாடு மாறுளதோ?"

என்று வினவி, வீரச் சுதந்திர வேட்கையைக் கிளப்புகிறான் பாரதி.

பாரதி வேண்டிய சுதந்திரம், பாரதி தூண்டிய சுதந்திரம், மிகப் பெரிது. அது "ஆரமுது", புளித்த கள்

அல்ல. அது 'விண்ணில் இரவி', மின்மினி அல்ல. "கண்ணினு மினியது அந்த சுதந்திரம்," பாரதி கருத்தில் இந்தச் சுதந்திரம் "கண்ணீரும் செந்நீரும்" பாய்ச்சி வளர்க்கப் பட்டது, படுவதேயன்றி. "தண்ணீர் விட்டு" வளர்க்கப் பட்டதோ, படுவதோ அல்ல. ஆகவே, இதை 'வீரசுதந்திரம்' என்று வீறுகொண்டு பாடுகிறுன். "வேண்டும்" என்று சுயாட்சி கேட்ட திலகர் பெருமானை விட அழுத்தமாகக் கேட்கிறுன் பாரதி.

பெருவாழ்வுக்கு இன்றியமையாத இந்தச் சுதந்திரத்தை, போராடி, "எதுவும் நல்கி இங்கெவ்வகையானும்" வெல்ல முயலாமல், அற்ப சுகத்தில் மூழ்கிக் காலத்தைத் தள்ள முயல்வோரை நினைத்துத்தான் பாரதி :

"மண்ணிலின்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை இழப்பாரோ?
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினுல்
கைகொட்டிச் சிரியாரோ?"

என்று கேட்கிறுன். கண்ணை விற்றுச் சித்திரம் வாங்குவதும், சுதந்திரத்தை விற்றுச் சுகவாழ்வு பெறுவதும், கைகொட்டிச் சிரிக்கத்தக்க மகா மடத்தனம் என்று என்ன அழகாகச் சொல்கிறுன் பாருங்கள்!

## சுதந்திர தேவியைத் தொழுதான்

நரகவாதனைகளும், ஹிட்லர் கொலை பாதகங்களும், முசோலினி அட்டகாசங்களும் 'விச்வரூப மெடுத்து வெம்புலி போல் பாய்ந்தாலும்,

"சுதந்திர தேவீ! நின்னைத்
தொழுதிடல் மறக்கிலேனே"

என்று சுதந்திர வேட்கையோடு இரண்டறக் கலந்து நிற்க வேண்டிய உடும்புப் பிடிப்பையும் உருக்கு உறுதியையும் இசை முழக்குகிறுன்

எத்தனை டால்டமாரமடித்து, மினுக்கிப் பிலுக்கி போக போக்கியத்தில் திளைப்பவராயினும், சுதந்திரம்

இல்லாதவராயின் அவர்களுடைய வாழ்க்கை "அணிகள் வேய் பிணம்" (அலங்காரப் பிரேதம் போல் பாழானதே என்று "நெட்டை நெடுமரங்களுக்கும்" மண்டையில் உறைக்கும்படி அடித்துக் கூறுகிறான்.

சுதந்திரமில்லா நாட்டில்,

"ஆவியங்குண்டோ? செம்மை
அறிவுண்டோ? ஆக்கமுண்டோ?"

என்று உலகம் அதிர வினவுகிறான்: அடிமை நாட்டில் காவிய நூல்களும் ஞானக் கலைகளும் விளையாதென்கிறான். விடுதலை விழையாத, சுதந்திரத்தைப் பரிபாலிக்காத மக்களை "பாவிகள்" என்று சபிக்கிறான். சுதந்திரம் இல்லாத நாடு நாடன்று, நடைப்பிணங்கள் திரியும் காடு என்று கூறித் தமிழகத்தின் கும்பகர்ணத் தூக்கத்தை இருப்புலக்கை கொண்டு கலைக்கிறான்.

சுதந்திரத்தின் பெருமையை நன்றாக உணர்ந்த பாரதி,

"கூற்றினுக்குயிர் கோடி கொடுத்தும் நின்
பேற்றினைப் பெறுவோம்"

என்று கோஷிக்கிறான். இதோடு நிற்கவில்லை.

சுதந்திரம், ஜனநாயகம் என்னும் "பேரறத்தினைப் பேணும் நல்வேலி" என்றும், "சோர வாழ்க்கை, துயர், மிடி" ஆகிய காரிருட் படலங்களைக் கிழித்தெறியும் "சோதி" என்றும், "வீரருக்கு அமுது" என்றும் அமுதத் தமிழில் பொழிகிறான்.

இவ்வாறு, பல பாட்டுக்கள், கண்ணிகள், விருத்தங்கள் மூலம், பொதுப்படையாகச் சுதந்திரத்தின் மாண்புகளை, உலக இலக்கியத்தில் இடம் பெறத்தக்கவாறு தமிழனுக்கு விளக்கி விட்டு இந்நாட்டுக்கு ஏற்ற ரீதியில் சுதந்திரத்தையும் விடுதலையையும் பற்றிப் பாடுகிறான். எல்லோரும் பாடத்தக்க பண்களில் பாடுகிறான் — "சுதந்திரப்பள்ளு" "விடுதலை" என்ற இரண்டு பாடல்களில்.

## ஆனந்த சுதந்திரம் அமைத்தான்

"ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று" பாரதி ஆனந்த சுதந்திரப்பள்ளுப் பாடும்போது, "வெள்ளைப் பரங்கியைத் துரையென்ற காலமும் போச்சே" என்று மாத்திரம் பாடவில்லை.

பார்ப்பானை ஐயரென்ற காலம் போகவேண்டும் (அதாவது வருணாசிரம தர்மம் அல்லது சாதிமுறையின் ஆதிக்கம் தவிடுபொடியாக வேண்டும்), எல்லோரும் சமமென்பது உறுதியாகவேண்டும். (அக்கிரகாரங்களும் சேரிகளும் அழிந்து ஒழிந்து, புதிய நகரங்களும் புதிய கிராமங்களும் எழுந்து, வாழ்வில் எல்லோருக்கும் சமசந்தர்ப்பமும், சம உரிமையும் கிடைக்கப்பெற வேண்டும்), எல்லோரும் ஒன்றெனும் காலம் வரவேண்டும். பொய்யும் ஏமாற்றும் தொலைகின்ற காலம் வர வேண்டும். கெட்ட நயவஞ்சகக்காரர்களுக்கு நாசம் வரவேண்டும். உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்து, வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்து, விழலுக்கு நீர்ப்பாய்ச்சியும் வீணருக்கு உழைத்தும் 'மாய மாட்டோம்', 'உடலம் ஓயமாட்டோம்' என்ற நிலைமை ஏற்படவேண்டும். நாமிருக்கும் நாடு நமது என்ற அறிவும், அது நமக்கே உரிமை என்ற போதமும் ஏற்படவேண்டும் என்றெல்லாம் பாடுகிறான். பரங்கியைத் துரை என்ற நிலைமை மாறுவதோடு மேற் சொன்ன அத்தனை காரியங்களும் நிறைவேறினால்தான், ஆனந்த சுதந்திரப்பள்ளு பூரணத்துவம் அடையுமென்பது பாரதி கருத்து.

## விடுதலை முழக்கிய வீரன்

"விடுதலை"ப் பாட்டு இன்னும் விளக்கம் தருகிறது.

வெள்ளை அதிகார வர்க்கத்திலிருந்து விடுதலை பெறுவதோடு பாரதி திருப்திகொள்ளவில்லை. "சாதியால் வந்த சிறு நெறி"யால் தாழ்த்தி மிதிக்கப்பட்ட மக்கள் விடுதலை பெற்றால்தான் உண்மையான விடுதலை வரும் என்று முற்றத்

தெளிகிறான். அதனாலேயே, "பறையர்க்கு விடுதலைவேண்டும், தீயர்க்கு விடுதலைவேண்டும், புலையர்க்கு விடுதலைவேண்டும்" பரவரோடு குறவருக்கும் மறவருக்கும் விடுதலைவேண்டும்', என்று அழுத்தந் திருத்தமாகக் கோருகிறான். வெறும் விடுதலை மாத்திரமல்ல; அவர்கள், "திறமை கொண்ட தீமையற்ற" தொழிலும் (சுரண்டல் கொள்ளையும் ஒட்டுணிப் பிழைப்புமல்ல) "தேர்ந்த கல்விஞானமும்" எய்தி நல்வாழ்வு வாழ்வதே உண்மையான விடுதலை என்கிறான். ஏழையென்றும் அடிமையென்றும் எவனும் இல்லை என்றும், ஜாதியில் இழிவு கொண்ட மனிதன் இந்தியாவில் இல்லையென்றும், சமூக வாழ்வு அமைந்தால்தான் உண்மையான விடுதலை மலரும் என்றும் தெட்டத் தெளிவாகக் கூறுகிறான். கல்வியும் செல்வமும் சகலரும் எய்தி, எல்லோரும் மன மகிழ்ந்து கூடி. மனிதர் யாவரும் ஒரு நிகராக வாழவேண்டுமென்கிறான். மாதர்களும் "தாதரென்ற" நிலைமை மாறி, சரிநிகர் சமானமாக வாழவேண்டுமாம்.

"ஒரு நாட்டை மற்றொரு நாடு அடிமைகொள்ளும் வரையிலும், முதலாளிகள் தொழிலாளிகளைக் கொடுமை செய்யும் வரையிலும், ஆடவர் பெண்டிரை அடக்கி ஆளும் வரையிலும் நான் நிம்மதியாக இருக்கமாட்டேன்" என்றான் ரோமன் ரோலண்ட். அவன் பிரெஞ்சுக்காரன். பாரதி இந்திய நாட்டான்; அதிலும் தமிழன். ஆகவே பாரதி ரோலண்டோடு சேர்ந்து மாத்திரமல்ல போராடுகிறான். இன்னும் ஒருபடி மேற்சென்று, பார்ப்பானை ஐயரென்ற காலத்தைப் போக்கவும், பறையனும், புலையனும் விடுதலைபெறப் பார்க்கவும் அதாவது சாதி முறையை வேரோடு கல்லி எறியவும் வாழ்க்கையை அர்ப்பணிக்கிறான்.

"பொய்மை தீர மெய்மை நேர
வருத்த மழிய வறுமை யொழிய
வைய முழுதும் வண்மை பொழிய
வேண்டுமடி யெப்போதும் விடுதலை அம்மா!"

என்ற பாரதி விடுதலை முழக்கத்தை என்றேனும் மறக்க இயலுமா!

## குடி அரசு கண்டான் கொடுங்கோலை வென்றான்

பாரதி உயர்ந்த ஜனநாயகவாதி. தமிழ்ப் பண்பு கெடாத, புதிய ஜனநாயகத்திற்கு எவ்வளவும் பொருத்தமுள்ள அரசியல் கவிஞன் பாரதி.

சங்க காலத்தில் செங்கோல்—முடி அரசு போற்றப் பட்டது.

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு"—குறள்

குடியைத் தழுவிநின்ற அரசனைப் போற்றினர் வள்ளுவர். "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று பாடினான் சங்ககாலப் புலவன் ஒருவன். மன்னனை உயிராகவும் மக்களை உடம்பாகவும் கண்டது அன்றைய காட்சி. இது முடி அரசு இலக்கணம்.

பின்னால் வந்த கம்பனுக்கு மன்னனைவிட மக்களே சிறந்தவர்களென்று தோன்றிற்று. குடி அரசுக் கொள்கை அவன் காலத்திலில்லை. ஆயினும் முன்னிலும் முன்னேறி, மக்களை உயிராக்கி, மன்னனை உடம்பாக்கி,

"உயிரெல்லாம் உறையுமோர்
உடம்பு மாயினான்"

என்று தசரதனைப் பற்றிப் பாடும்பொழுது பாடுகிறான். இது மத்திய காலம். இந்தக் காலத்தில்தான்,

"கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே"

என்றான் அதிவீரராம பாண்டியன். கொடுங்கோன்மையின் கீழிருப்பதைவிடக் காட்டுக்குப் போய்விடுவது மேல் என்ற வரையில்தான் அவனுக்குச் சொல்ல முடிந்தது. காரணம், மன்னனின் "தெய்வீக உரிமை"யில் நம்பிக்கை இருந்த காலம் அது.

பாரதி வந்தான்—ஜனநாயக யுகத்தில்,

“ நல்லற நாடிய மன்னரை வாழ்த்தி
நயம்புரிவாள் எங்கள் தாய்—அவர்
அல்லவராயின் அவரை விழுங்கிப்பின்
ஆனந்தக் கூத்திடுவாள்”

என்று பாடினன். மக்களைத் தழுவிய அரசர்களிருந்தால், அவர்களைக் கருவியாகக் கொண்டு ஜனசக்தி நல்லாட்சி நடத்து மென்றும், மக்கள் விரோதிகள் மன்னர்களாயிருப்பின், ஜனசக்தி அவர்களை விழுங்கி ஏப்பம் விட்டுவிடுமென்றும் கூறுகிருன். மக்களுக்காக மன்னனை ஒழிக்கலாமென்ற ஜன நாயகக் கருத்து எழுந்துவிட்டது. ஆயினும் பாரதியின் அரசியல் ஆரம்ப காலமே இது.

பின்னர் மன்னர்களின் யதார்த்த நிலைமையைப் பாரதி கண்டு தெளிந்து பாடுகிருன். கேளுங்கள் :

“ நாட்டு மாந்தரெல்லாம்—தம்போல்
நரர்களென்று கருதார்;
ஆட்டு மந்தையாமென்—றுலகை
அரசர் எண்ணிவிட்டார்.”

இன்று ஹைதராபாத் நைஜாமுக்கும், மைசூர் மகாராஜா வுக்கும் இது அப்படியே பொருந்தக் காண்கிருேம். மற்ற மன்னர்களும் ஒருகாட்டு ஓநாய்கள் தானே!

மன்னர்களின் நிலைமையைக் கண்ட பாரதி,

“ ஓரஞ் செய்திடாமே—தருமத்
துறுதி கொன்றிடாமே
சோரஞ் செய்திடாமே—பிறரைத்
துயரில் வீழ்த்திடாமே
ஊரையாளு முறைமை—உலகில்
ஓர் புறத்துமில்லை” (பாஞ்சாலி சபதம்)

என்று சொல்லுகிற அளவுக்கு வருகிருன்.

## நவம்பர் புரட்சியின் நண்பன்

ரஷ்யப் புரட்சி நிகழும்வரையில், நயவஞ்சனையின்றி அறவழியில் நின்று மக்களைத் துன்பக்கேணியில் தள்ளாமல், ''ஊரை ஆளும் முறைமை''யை உலகத்தில் ஓர்புறத்திலும் பாரதியால் பார்க்க முடியவில்லை. ரஷ்யப் புரட்சியைக் கண்டதும்,

''ஆஹாவென் றெழுந்து பார் யுகப் புரட்சி''

என்றான்.

''இடிபட்ட சுவர்போல கலி விழுந்தான்''

என்றான்.

" குடிமக்கள் சொன்னபடி
குடிவாழ்வு மேன்மையுறக் குடிமை நீதி
கடியொன்றி லெழுந்தது பார்; குடி அரசென்
றுலகறியக் கூறிவிட்டார்
அடிமைக்குத் தளையில்லை
யாருமிப்போ தடிமையில்லை அறிக''

பாரதி குடி அரசைக் கண்டான். தமிழ் இலக்கியத் திலும் உண்மைக் குடி அரசின் விளக்கம் இடம் பெற்று விட்டது.

நவம்பர் புரட்சி பாரதிக்கு உண்மையான குடி அரசைக் காட்டிற்று. சோவியத் குடி அரசால், ''கலி''யுகம் முடிவ தையும், ''கிருத யுகம்'' (சத்ய யுகம்) தோன்றுவதையும் பாரதி கண்டான்.

இந்தப் புதுயுக வெளிச்சத்தில்தான் பாரதி பாடல் களின் சிகரமும் இறுதிப் பாடலுமாகிய ''பாரத சமுதாயம்'' பிறந்தது.

" எல்லோரும் ஓர்விலை எல்லோரும் ஓர்நிகர்
எல்லோரும் இந்நாட்டு மக்கள்
எல்லோரும் இந்நாட்டு மன்னர்''

என்றுக்கும் நவீன சமூக ஏற்பாட்டை, உலகத்திற்கு ஓர் புது மையையும் நமக்கு ஓர் ஒப்பில்லாத சமுதாயத்தையும் தரும் முப்பது கோடி (இன்று நாற்பது கோடி) "ஜனங்களின் சங்க முழுமைக்கும் பொதுவுடைமை"யைக் கண்டான் பாரதி.

## பழமையை எதிர்த்தான் புதுமையை ஏற்றான்

இந்தப் புதிய சமூக அரசியல், பொருளாதார வாழ்க்கை ஏற்பாட்டைப் பொதுவுடைமைச் சமுதாயத்தை — நிறுவ, புதிய பார்வை, புதிய வழி, புதிய திட்டங்கள் தேவை. அதற்குப் பழைய பார்வை மாறவேண்டும், பழைய வழி கைவிடப்பட வேண்டும்.

"புதியதோர் உலகம் செய்வோம்" என்று மனித வர்க்கத்தைத் தட்டியெழுப்பி, நேர்வழி காட்டிய கார்ல் மார்க்ஸ் கூறினான் : "சென்ற தலைமுறைகளின் பரம்பரை வழக்கங்கள் இன்றைய மக்களின் மூளைகளை இமயமலைபோல் அமுக்கிக் கொண்டிருக்கின்றன" என்று.

இந்த உண்மையைப் பாரதி முழுக்க முழுக்க உணர்ந்தான். பழைய நோக்கையும் போக்கையும் எதிர்த்து முறியடிக்க முயன்றான்.

சிறுவர், சிறுமிகளுக்குப் புதிய ஆத்திசூடியில், "தொன்மைக்கு அஞ்சேல்" என்றும், "புதியன விரும்பு" என்றும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தான்.

பழமைக் "குட்டையில் ஊறிப்போன மட்டை"களைக் கூட வளைக்கத்தக்க விதத்தில் "அற்புதமாக"ப் பழைய பார்வையைப் பாரதி தாக்குவதை நோக்குங்கள் :

" முன்பிருந்தோர் காரணத்தாலே
மூடரே, பொய்யை மெய்யெனலாமோ?
முன்பெனச் சொலும் காலமதற்கு
மூடரே, ஓர் வரையறை யுண்டோ?

முன்பெனச் சொலின் நேற்று முன்பேயாம்
மூன்றுகோடி வருடமு முன்பே
முன்பிருந் தெண்ணிலாது புவிமேல்
மொய்த்த மக்களெலா முனிவோரோ?''
"நீர்பிறக்கு முன் பார்மிசை மூடர்
நேர்ந்த தில்லைஎன நினைந்தீரோ?
பார் பிறந்தது தொட்டின்று மட்டும்
பலபலப் பல பற்பல கோடி
கார்பிறக்கு மழைத் துளிபோலே
கண்டமக்க ளனைவ ருள்ளேயும்
நீர்பிறப்பதன் முன்பு மடமை
நீசத்தன்மை இருந்தன வன்றோ?''
''பொய்யொழுக்கை அறமென்று கொண்டும்
பொய்யர் கேலியைச் சாத்திரமென்றும்
ஐயகோ, நாங்கள் பாரதநாட்டில்
அறிவிலார் அறப்பற்று மிக்குள்ளோர்
நொய்யராகி அழிந்தவர் கோடி''

(பாஞ்சாலி சபதம்)

வேறொரு விதமாகப் பழைமைப் பார்வைக்குக் குழி பறிக்கிறான் பாரதி! கருத்தூன்றுங்கள்:

''சென்றதினி மீளாது மூடரே நீர்
எப்போதும் சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலையெனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர் சென்றதனைக் குறித்தல்வேண்டா
இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்றுநீவிர்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு
தின்றுவிளை யாடிஇன்புற் றிருந்து வாழ்வீர்
தீமையெல்லாம் அகன்றுபோம் திரும்பிவாரா!''

என்று பாடுகிறான்—பழைய பாதையைத் தூர்த்துப் புது வழி கோலும் குறிக்கோளோடு.

## மடத்தன முதலையின் வயிற்றைக் கிழித்தான்

முன்னேறும் மனிதனை முதலை மாதிரிக் கவ்விப் பின்னு லிழுக்கும் மூடப் பழக்க வழக்கங்களையும் அவற்றிற்கு அரண் செய்யும் வேத, சாத்திரங்களையும் மத சம்பிரதாயங்களையும் இன்னபிறவற்றையும் ஈவிரக்கமின்றித் தாக்குகிறான்—தக்க வாறு, நயம்பட.

"சாத்திரம் கோடிவைத்தாள்—அவை தம்மினும் உயர்ந்த தோர் ஞானம் வைத்தாள்" என்று கண்ணனாகிய தாய் தந்த செல்வத்தை வர்ணிக்கிறான். இந்த வர்ணனையில், மலை போன்ற நூல் குவியல்களைவிட மனித அறிவு மேம்பட்டது என்று உணர்த்துகிறான். ஓய்வு நேரங்களில் வேடிக்கை பார்த்து விழுந்து விழுந்து சிரித்துப் பொழுதைப் போக்க,

" கோத்தபொய் வேதங்களும்—மதக்
கொலைகளும் அரசர்தம் கூத்துக்களும்
மூத்தவர் பொய்ந்நடையும்—இள
மூடர்தம் கவலையும் அவள் புனைந்தாள்."

என்று கூறி, பழைமைக்கு "டைனமிட்" வைக்கிறான்.

"சூனியப் பொய்ச் சாத்திரங்கள்" என்று சழக்கர்களின் சாத்திரங்களையும், "வெறுங் கதைத்திரள்" என்று "புலியோர் சொல்லும்" வேதங்களையும், மனிதன் முன்னோக்கிப் பார்க்காம லும் முன்னேறி நடக்காமலும் தடை செய்யும் இடறு கட்டை களென்று தூக்கி எறிகிறான்.

நாட்டு மக்கள், "பொய்ச் சாத்திரப் பேய்கள் சொல்லும் வார்த்தை" களை நம்புவதையும், "வஞ்சனைப் பேய்களை"க் கண்டு அஞ்சிச் சாவதையும், "மந்திரவாதி என்று சொன்ன மாத்திரத்தில் மனக்கிலி பிடிப்பதையும்", "சிப்பாயைக் கண்டஞ்சுவதையும்", "யாரிடத்தும் பூனைகள் போல் ஏங்கி நடப்பதையும்", ஐந்து தலைப் பாம்பென்றும் ஆறு தலைப் பாம் பென்றும்" சண்டையிட்டு, "நெஞ்சு பிரிந்து, நெடுநாள் பகைத்

திருப்பதையும்'', ''கஞ்சி குடிப்பதற்கில்லாமைக்கும் பஞ்சத்தில் பரிதவித்துத் துஞ்சி மடிவதற்கும் காரணங்கள் இவை'' என்று அறியாதிருப்பதையும் கண்டு நெஞ்சு பொறுக்காமல் இரத்தக் கண்ணீர் வடித்தான் பாரதி.

''கண்ணிலாக் குழந்தைகள்போல்-பிறர் காட்டிய வழியிற் சென்று மாட்டிக் கொள்வதை''த் தடுத்து நிறுத்த மக்களுக்குப் புதுப் பார்வைவேண்டும் என்பதைத் தெளிவாக உணர்ந்தான் பாரதி.

மத அபினியின் மயக்கத்திலிருந்து மக்களை விடுவிக்க முயன்றான். மாடனை காடனை வணங்குவது மதியீனம் என்றான். ''அறிவே தெய்வம்'' என்றான். ''தெய்வம் நீ என்றுணர்'' என்று சின்னஞ்சிறுர்க்கு உணர்த்தி, எதிர் காலத்தில், கடவுளைக் காக்கும் கசடர்களை இல்லாமல் செய்ய வழி தேடினான்.

மதத்தையும், கடவுளையும், வழிபாடுகளையும் பொறுத்த மட்டில் தனக்கு முற்பட்ட கவிஞர்களைவிட—புலவர்களைவிட பாரதி பலமுற்போக்கான கருத்துக்களை வெளியிட்டிருக்கிறான்.

'' செத்த பிறகு சிவலோகம் வைகுண்டம்
சேர்ந்திடலா மென்றே எண்ணியிருப்பார்
பித்த மனிதர்''

என்று கூறி, சிவலோக, வைகுண்டப் பித்தத்தை மண்டையிலடிக்கிறான்.

## மதப் பேயை ஓட்டினான்; மதி ஒளி காட்டினான்

மோட்சத்தைப் பற்றியும், தன் காலத்திற்குப் புதிய கருத்தை வெளியிடுகிறான்.

''கவலை துறந்திங்கு வாழ்வதே வீடு'' என்கிறான். (வீடு-மோட்சம்)

கோவில்-குள மதத்தை—சுரண்டலுக்குக் காரணமாக விளங்கும் ஸ்தாபன ரீதியான மதத்தை—குழி தோண்டிப் புதைக்கும் திருப்பணியை, முரட்டுத்தனமாக அல்ல, நாசுக்காக

நயமாகச் சொல்வதை நாம் கூர்ந்து கவனிக்க வேண்டும்—இது பாரதியின் புதுப்பாதை அந்நாள் அதனுல்.

"சரஸ்வதி பூஜை" செய்வது, மந்திரத்தை முணு முணுப்பது அல்லவாம். ஏட்டை வரிசையாக அடுக்கி அதன்மேல் சந்தனத்தை, மலரை இடும் சாத்திரம் அவள் பூசனை அல்லவாம்.

" வீடுதோறும் கலையின் விளக்கம்
வீதிதோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்களெங்கும் பலபல பள்ளி"

அமைக்க வேண்டுமாம். அதோடு படிப்பு வேண்டாத ஊரை நெருப்பிட்டுப் பொசுக்கவேண்டும். அதுதான் உண்மையான சரஸ்வதி பூஜையாம். இங்குதான் எல்லாத் தருமங்களையும் பாரதி குறிப்பிட்டுவிட்டு,

" அன்னயாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோரேழைக்கு எழுத்தறிவித்தல்"

என்று முடிவு கட்டிச் சொல்லுகிருன்.

## ஒற்றுமை வழியில் வெற்றியைக் கண்டான்

'ஒற்றுமை பயின்ருயோ?' என்று ஆங்கிலேயன் வாயிலாக ஒரு கேள்வியைப் போட்டு நமது மாபெருங் குறையை எடுத்துக் காட்டுகிருன் கவி அரசன்.

அரசியல் விடுதலை முழுமை அடைய வேண்டுமாயினும் சரி, பொதுவுடைமைப் புதிய சமுதாயம் காணவேண்டுமாயினும் சரி, அவிழ்த்துவிட்ட நெல்லிக்காய் மூட்டைபோல் சிதறி, 'நவக்கிரகங்கள்' போல் திசைக்கொன்ருகத் திரும்பி நிற்கும், வேண்டாத நிலைமை கூண்டோடு ஒழியவேண்டும் என்று உறுதிகொண்டான் பாரதி.

இந் நாட்டின் சாபத்தீயே ஒற்றுமைக் குறைவுதான் என்பதை உணர்ந்த பாரதி,

"ஒற்றுமைக்குள் உய்யவே
ஒரு பெரும் செயல் செய்யத்" துணிந்தான்.

"ஒற்றுமை வழி ஒன்றே வழி யென்ப
தேர்ந்திட்டோம்— நன்கு—தேர்ந்திட்டோம்"

என்று பாருலகதிரப் பறைசாற்றி, வெள்ளை அதிகார வர்த்தகமும் கொள்ளை ஏகாதிபத்தியங்களும் 'கிடுகிடுக்க' வைத்தான்.

"சொந்தச் சகோதரர்களை" நோக்கி, பாரதி

"ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தால்பின் நமக்கெது வேண்டும்?"

என்று யாருக்கும் எளிதில் புரியும் விதத்தில் ஒற்றுமையின் அவசர அவசியத்தையும் எல்லையில்லாத வலுவையும் விளக்க ஆணித்தரமாக அழகாக ஒரு கேள்வியைக் கேட்கிருன்.

இந்தியாவில்—குறிப்பாகத் தமிழகத்தில் ஒற்றுமை மெய்யாகவே உருவாக வேண்டுமானால், சாதிமுறை ஆணிவேர், பக்கவேர், சல்லிவேரோடு ஒழிந்தாக வேண்டும் என்பதை மிக மிக மிகத் தெளிவாகக் கண்டான் பாரதி. மொழி, இன அடிப்படைகளில் அமையும் நாடுகளின் ஒற்றுமையே, எதிர்காலத்தில் இந்திய ஒற்றுமையாக நிலைபெற முடியுமென்பதையும் கண்டான். இந்தப் பெருஞ் செயல்களை—'சாதி முறை ஒழிப்பு',—'சுதந்தர இந்தியாவில் சுதந்தரத் தமிழகம்' ஆகியவைகளை—செய்து முடிக்கத் தனது ஆயுள் முழுவதும் போராடினன்.

## சாதியைப் பழித்தான் சமதர்மம் அளித்தான்

சாதிமுறை தேசியத்திற்குப் பரம வைரி, சுதந்தரப் போராட்டத்திற்குப் பேரிடையூறு, ஒற்றுமைக்கு அரிப்புழு என்பதை அந்நாளிலிருந்தே அங்கைக்கனியாய் அறிந்தான் பாரதி.

"வந்தேமாதர மென்போம்—எங்கள்
மாநிலத்தாயை வணங்குது மென்போம்"

சாதி மதங்களைப் பாராட்டுதல் தப்பு—சுத்தத் தப்பு என்பது பாரதியின் முடிந்த முடிபு. "வேதியராயினும்" "ஈனச்சாதியராயினும்" ஒன்றே என்பது அவன் தீர்ப்பு.

சாதிப் பிரிவினையைச் சாக்காக்கி அந்நியர் நம்மவரை ஆட்சி செலுத்த அவன் அரை விநாடிகூட அனுமதிக்கவில்லை. அடிமைகளாக்கிய அந்நியர் 'நீதி' சொல்வதை அவன் அடி வயிற்றிலிருந்து வெறுத்தான்.

"ஆயிரம் உண்டிங்கு சாதி—எனில்
அந்நியர் வந்து புகலென்ன நீதி"

என்று ஆங்கிலேயர்க்கும், அவர்கள் இந்தியாவில் நுழைந்து இரட்சகர்களாக இருப்பது நீதி என்னும் குலாம்களுக்கும் முகத்திலடித்துப் பதில் சொல்லுகிறான் பாரதி இதை வைத்து, அவன் சாதி முறையோடும், சகோதரச் சண்டையோடும் சமரஸம் செய்துகொள்கிறான் என்று யாரும் மறந்தும் நினைக்கவேண்டாம். சாதிப்பிரிவினையைச் சகோதரச் சண்டை என்று கூறுவது சாதி முறைக்குச் சப்பைக்கட்டுக் கட்டாது, சாவு மணிதான் அடிக்கும்.

"............... ஓர்
தாயின் வயிற்றில் பிறந்தோர்—நம்முன்
சண்டை செய்தாலும் சகோதரரன்றோ?"

என்று அடுத்தாற்போல் அவன் இலக்கியம் முழுவதும் சாதி முறையைக் கட்டோடு எதிர்க்கிறது.

மேல்சாதி ஒழியவேண்டுமென்கிறான். கீழ்ச்சாதிக்கு விடுதலை வேண்டுமென்கிறான் சாதிகள் இல்லை என்கிறான். "குலத்தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்" என்கிறான். "எல்லோரும் ஒன்று" என்கிறான்.

"பாருக்குள்ளே சமத்தன்மை—தொடர்
பற்றும் சகோதரத் தன்மை

யாருக்கும் தீமை செய்யாது—புவி
எங்கும் விடுதலை செய்யும்''

என்கிருன்.

**பார்ப்பானுக்குப் பகையாளி பாமரனுக்கு உறவாளி**

பார்ப்பனரிடையில் பிறந்தவன் பாரதி ஆயினும்,

''பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே''

என்று சமூகத்தின் அடித்தட்டில் வாழும் சர்வ சாதாரண மக்களோடு தோளோடுதோள் நின்று சாதியற்ற சமத்துவச் சங்கம் முழங்குகிருன்.

''இந்நாளிலே பொய்மையைப் பார்ப்பார்—அவர்
ஏதுசெய்தும் காசுபெறப் பார்ப்பார்'' என்றும்,

''பிள்ளைக்குப் பூணூலா மென்பான்—நம்மைப்
பிச்சுப்பணம் கொடெனத் தின்பான்
கொள்ளைக்கே சென்ருலும் வஞ்சம்—செய்து
கூசாமல் வாங்கிடுவான் லஞ்சம்'' என்றும்,

''பேராசைக் காரனடா பார்ப்பான்—ஆனுல்
பெரியதுரை என்னில் உடல் வேர்ப்பான்
யாராளுலும் கொடுமை செய்வான்—பணம்
அள்ளியிட வில்லையெனில் வைவான்.''

என்றும் மறவன் பாட்டில் விளாசுகிருன். சாதிமுகட்டில் இருக்கும் பார்ப்பானுக்குக் கொடுக்கும் அடி, வெறும் சாதித் துவேஷ அடியல்ல, சாதிப்பேயின் உயிர் நிலையைச் சிதைக்கும் சம்மட்டி அடியென்று உணரவேண்டும். பார்ப்பானிலிருந்து பறையன் வரையில் ஆயிரம் சாதிகளைக் கொண்டு அழுகி நாறும் சாதிய, சமூக ஏற்பாட்டையே விடல் தேங்காயாக உடைத்தெறிந்துவிட வேண்டுமென்பது பாரதியின் கொள்கை.

ஆகவேதான் மேல்சாதிப் பார்ப்பனரைத் தாக்கிய பாரதி, ''பறையர், தீயர், புலையர்'' என்ற தாழ்த்தப் பட்ட மக்களின் விடுதலை முரசும் கொட்டுகிருன். தருணம்

வாய்த்த பொழுதெல்லாம், பாடல்களின் மூலமும் வசனங்கள் மூலமும் சாதிமுறைமீது அணுகுண்டு வீசுகிறான். சாதி ஒழிப்புத் திருப்பணியில் ''தமிழ்மகள் ஔவை சொல்லிய சொல் அமிழ்தம்'' என்று கொண்டாடுகிறான். நாட்டின் விடுதலைக்கு மக்களின் முன்னேற்றத்திற்குச் சாதி பொல்லாத முட்டுக்கட்டை என்பதை ஆழமாக உணர்ந்திருந்த பாரதி, சாதி ஒழிப்புக்கும் சமதர்ம உணர்ச்சிப் பெருக்குக்கும் எப்படி யெப்படி யெல்லாம் வழி கூறலாமோ அப்படியப்படி யெல்லாம் வழி கூறுகிறான்.

உயிரோடிருந்த காலத்திலும் தன் சொந்த வாழ்க்கையின் மூலமாகவும் சாதி ஒழிப்புக்கு வழிகாட்டியாயிருந்தான்.

''மேல்சாதிக்காரன்'' சாதியுணர்ச்சியை விட்டுவிட வேண்டிய போக்கைத் தன் வாழ்க்கையின் மூலமாகவும், சாதியை எதிர்த்துத் தீரவேண்டியவர்கள் கைக்கொள்ள வேண்டிய மனப்பான்மையைத் தன் இலக்கியத்தின் மூலமாகவும் காட்டியிருக்கிறான் பாரதி—மிக அழகாக.

''சாதிக் கொடுமைகள் வேண்டாம்—அன்பு
தன்னிற் செழித்திடும் வையம்''

என்றும்,

''நிகரென்று கொட்டுமுரசே—இந்த
நீணிலம் வாழ்பவரெல்லாம்
தகரென்று கொட்டுமுரசே—பொய்மைச்
சாதிப் பிரிவினையெல்லாம்''

என்றும் பாடிய பாரதியை விடத் தமிழர் மரபில் சாதி ஒழிப்பில் சிறந்த வீரனாக விளங்கியவன் யார்? சாதி உணர்ச்சியைப் பாராட்டாதிருப்பதிலும், சாதி முறையை ஒழிப்பதிலும், தனி வாழ்விலும், பொது வாழ்விலும், தமிழ் நாட்டுப் பார்ப்பன இளைஞர்களும் திராவிடக் கழக இளைஞர்களும் பாரதி வழியிற் செல்வார்களாக!

இதோடு, ஒற்றுமைக்கு விரோதமான மதச்சண்டைகளையும் பாரதி வெறுத்தான்; மறுத்தான்.

"தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தம்
திக்கை வணங்கும் துருக்கர்
கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
கும்பிடும் ஏசுமதத்தார்"

எல்லோரும் ஒன்றுபட்டு வாழவேண்டுமென்று உள்ளத்தைப் பிழிந்து உருக்கமாக வேண்டினான்.

## தமிழ்ப்பண்பை யுண்டான்—தமிழின்பம் கண்டான்

பாரதி ஆரியன் - திராவிடன் சண்டையில் அங்கம் வகிக்கவில்லை. பாரதி தமிழர் பண்பில் கிஞ்சிற்றும் வழுவவில்லை. தமிழனை இழிவுபடுத்தும் எதையும் அவன் காலத்தில் அவன் உணர்ந்த வரையில் முழு மூச்சோடு எதிர்த்தான். ஆரியத்திலிருந்தாயினும் சரி, தமிழை வளப்படுத்த, தமிழனை மேம்படுத்த, கொள்ளத் தக்கவை என்று தனக்குப் பட்டவற்றைக் கொள்ள அவன் தயங்கவில்லை. அதே சமயத்தில், தமிழைத் தாழ்த்தி, ஆரியத்தை உயர்த்தியவர்களையோ, ஆங்கில மோகம் பிடித்து அலைந்தவர்களையோ அவன் ஆதரித்ததில்லை.

"கம்பனைப்போல், வள்ளுவர்போல்
இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை
உண்மை வெறும் புகழ்ச்சியில்லை"

என்று உலகுக்குப் பறைசாற்றிய பாரதி.

"எல்லாப் பொருளும் இவர்பால் உள" என்று பழைய பண்டிதர் பான்மையில் "அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்" என்று கூறவில்லை.

"மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமையில்லை"

என்று மாறுதல் வேண்டா நம்மவரின் மனத்துடிப்பைச் சுக்கு நூருக உடைத்தெறிகிருன்.

அதே மூச்சில்,

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புது நூற்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்"

என்று ஆணையிட்டு அரும்பணி அளிக்கிருன் புதிய தமிழகக் காதலர்களுக்கு.

புதுமைக் கலைகள் தேடினுன்
புதிய தமிழகம் பாடினுன்

"புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்தவளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினிலில்லை
... ... ... ... ... ... ... ... ... ... ...
சென்றிடுவீர் எட்டுத் திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"

தமிழை வளர்க்கக் கவிஞனின் கட்டளை இது.

'தமிழில் முடியுமா?' என்று நம்பிக்கையற்றுக் கேட்கும் அறிவாளிகளுக்கும் எழுத்தாளர்களுக்கும்,

"வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே"

என்று தமிழை வாழ்த்தி, நம்பிக்கை ஊட்டுகிருன்.

"எவ்வதுறைவ துலகம்; உலகத்தோ டவ்வதுறைவது அறிவு" என்ற வள்ளுவர் வாக்கைக் கடைப்பிடித்தான்; பாரதி. தமிழன் தன்மானத்தோடும் வாழ வேண்டும்.

தன்னை எல்லா வழியிலும் வலுப்படுத்தவும் எல்லாத் துறையிலும் வளப்படுத்தவும் வேண்டும். பிற இனத்தாரோடும் நாட்டாரோடும் ஒற்றுமைப்பட்டுப் புதிய பொது உடைமை இந்தியாவை நோக்கிச் செல்லவும் வேண்டுமென்பதுதான் பாரதியின் குறிக்கோள்.

இந்த உண்மை, பலவிடங்களிலும் பாரதி வெளியிட்டுள்ள கருத்துக்கள் மூலம் நமக்குத் தெளிவுபடுகிறது.

"சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே" என்று அசையாத உறுதியுடன் தனது தெளிந்த முடிவைத் தெரிவிக்கிறான்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே"

என்று பாடி நமது தமிழக அன்பைக் கிளறுகிறான்.

"தமிழ்த்திரு நாடுதன்னை—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா"

என்று தமிழ்நாடு நமது தாய்நாடு என்ற உண்மையை, என்றும் மறவாதிருக்க, பாலோடு உரைத்துப் பாப்பாவுக்குப் புகட்டுகிறான்.

'புது வருஷ வாழ்த்தில்'

"வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!
வாழிய பாரத மணித்திருநாடு"

என்று பாடி, தமிழையும் தமிழனையும் முதலிலும் பாரத நாட்டை இரண்டாவதாகவும் வாழ்த்துகிறான்.

## பாரதநாட்டு 'யூனியன்' படம் பிடித்துக் காட்டினான்

பாரத நாட்டின் மணிக்கொடிக்கு வணக்கம் செலுத்த எல்லோரையும் அழைக்கிற பாடலில் கொடிவணக்கக் காட்சியைப் பாரதி சித்திரிப்பது கூர்ந்து கவனிக்கத்தக்கது.

செந்தமிழ் நாட்டுப்பொருநர், சேரன்றன் வீரர் (மலையாளி கள்), சிந்தை துணிந்த தெலுங்கர், "தாயின் சேவடிக்கே பணி செய்திடு துளுவர்", கன்னடர், போரிற் காலனும் அஞ்சக் கலக்கும் மராட்டர், இந்துஸ்தானத்து மல்லர், "மறைவரும் கீர்த்திகொள் ரஜபுத்ர வீரர்", "பஞ்சநதத்துப் பிறந்தோர்" (பஞ்சாபியர்), துஞ்சும் பொழுதினும் தாயின் தொண்டு நினைத் திடும் வங்கத்தினர் (வங்காளிகள்)—இத்தகைய தேசிய இனத் தார்களைத் திரட்டி, அணியணியாகக் கொடியின் கீழ்க் கொண்டு வந்து நிற்க வைக்கிறான்.

"நம்பற்குரியர் அவ்வீரர்—தங்கள்
நல்லுயிரீந்தும் கொடியினைக் காப்பார்"

என்று அவர்களை அறிமுகப்படுத்துகிறான்.

"சேர்ந்ததைக் காப்பது காணீர்—அவர்
சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க"

என்று தேசிய இனங்களின் ஐக்கியத்தையும் அவர் சிந்தையின் வீரத்தையும் வாழ்த்துகிறான்.

இவ்வாறு ஏற்படும் புதிய 'பாரத தேசத்தின்' (இந்திய யூனியனின்) வெற்றிச் சாதனைகளைக் கற்பனைத்திறனோடு விளக்கு கிறான். பரஸ்பர நல்லுறவால் தேசிய இனங்கள் நலன் பல தழுவுவதைப் பூரிப்புடன் படம் பிடித்துக் காட்டுகிறான்.

1. "வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்"

2. "சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேரநன் னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்
தோணிகளோட்டி விளையாடி வருவோம்"

3. "கங்கை நதிப்புரத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்ளுவோம்"

4. "சிங்க மராட்டியர்தம் கவிதை கொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்"

5. "காசிநகர்ப் புலவர் பேசும் உரைதான்
காஞ்சியிற் கேட்பதற்கோர் கருவி செய்வோம்"

6. "ராசபுதானத்து வீரர்தமக்கு
நல்லியல் கன்னடத்துத் தங்கம் அளிப்போம்"

இப்படியிப்படி பலப்பல சாதனைகள், தேசிய இனங் களின் ஒற்றுமையில் ஏற்படும் லாபத்திற்கு பாரதி காட்டும் எடுத்துக் காட்டுகள்.

தமிழ், தமிழன், தமிழ்நாடு, பாரதநாடு, தேசிய இன ஒற்றுமை இந்திய யூனியன் உணர்ச்சிகளை வளர்த்தான் பாரதி. தேசிய இன அடிப்படையில் மலரும் நாடுகளின் கூட்டாட்சி யாக இந்திய யூனியன் அமையும் பொழுது வேற்றுமைப் பேய் கள் இருந்த இடம் தெரியாமல் மறையுமென்றும், அப்பொழுது,

"பாரத தேசமென்று பெயர் சொல்லுவார் - மிடிப்
பயங்கொல்லுவார் துயர்ப்பகை வெல்லுவார்"

என்றும் எத்துணைத் தீர்க்கதரிசனத்தோடு பாரதி சொல்லு கிறன், ஆஹா!

இன்று நெருப்புக்கிரையாகிச் சாம்பலான பாஞ்சாலத் தையும், டில்லியையும், நவகாளி, பீகார், எல்லைப் புறங்களை யும் நினைத்தால், இன அடிப்படையில், "ஒற்றுமை வழி ஒன்றே வழி" என்ற பாரதி சொல், பெருமையிற் பெருமை அடைகிற தல்லவா?

## பெண் விடுதலை பேணினன்
## பித்தர்நெறி கண்டு நாணினன்

"ஆண் பெண் சமத்துவமே அறமென்று தெரிகிறதா? வாருங்கள்! மாதர்களை லட்சக் கணக்கில் விடுதலை செய்வோம்" என்று அழைக்கிறன் பாரதி.

சில்லறைச் சீர்திருத்தக்காரர்கள் போல், பெண் மக்களுக்கான சில சிறுசிறு சீர்திருத்தங்களை பாரதி பாடவில்லை. "ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே" என்று ஆண்...பெண் நேர்—நிகர் வாழ்வையே கோருகிறான். "மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்" என்று பாரதி பாடும் பொழுது பெண்ணடிமையைச் 'சொக்கப்பனை' கொளுத்த அவன் மூட்டும் நெருப்பை வளர்க்க, 'டின் டின்' ஆக எண்ணெய் கொண்டு போக வேண்டுமென்று நம்மிடம் ஆவேசம் பாய்கிறது.

அரசியல் விடுதலையையும் பிற விடுதலைகளையும், பெண் விடுதலையை மறந்து, பேசித் தீர்த்த பெரியார்களையும் 'வீரர்களையும்' பார்த்து,

"விண்ணுக்குப் பறப்பதுபோல் கதைகள் சொல்வீர்
விடுதலையென்பீர், கருணை வெள்ளமென்பீர்
பெண்ணுக்கு விடுதலைநீர் இல்லையென்றால்
பின்னிந்த உலகினிலே வாழ்க்கையில்லை."

என்று கிண்டல் செய்தும் மண்டையிலடித்தும் மயக்கம் தெளிவிக்கிறான்.

"பெண்டாட்டி தனை யடிமைப்படுத்த வேண்டி
பெண்குலத்தை முழுதடிமைப் படுத்தலாமோ?"

என்று பாரதி 'ஈரேழுலகமும் ஊடுருவிப் பாயும்படி ஒரு கேள்வியைப் போடும் பொழுது, 'ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக தாயினத்திற்கு, இழிந்த தன்னலத்தால் என்ன அநீதம் புரிந்தோம்' என்று நம்மை நாமே சபிக்கத் தோன்றுகிறது.

பாரதி சோவியத் பெண்ணை ("நவீன ரஷ்யா"வின் பெண்ணை)க் கண்டான். "நங்கை கூறும் நவீனங்களை"யும் "பெண்மைத் தெய்வத்தின் பேச்சுகளை"யும் "உதய கன்னியின் உரையாடல்களை"யும் கேட்டான். புதுமைப் பெண்ணைக் கண்டு, அவளை அழைத்து வந்து, தமிழர்களிடையில் "துன்பம் நீக்கும் சுதந்திரப் பேரிகை" முழக்கச் செய்கிறான்.

'புதுமைப் பெண்' தனது 'வண்மலர்த் திருவாயால்' "'நாரத வீணை'யினும் இனிமையாக, 'கண்ணன் வேய்ங்குழலி' னும் மதுரமாக,

"அறிவுகொண்ட மனித உயிர்களை
அடிமையாக்க முயல்பவர் பித்தர்" என்றும்,
"சிறிய தொண்டுகள் தீர்த்தடிமைச் சுருள்
தீயிலிட்டுப் பொசுக்கிட வேண்டும்" என்றும்,
"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையம் தழைக்கும்" என்றும்,
"நாணுமச்சமும் நாய்கட்கு வேண்டும்
ஞானம் நல்லறம் வீர சுதந்தரம்
பேணுநற்குடிப் பெண்ணின் குணங்கள்" என்றும்,
"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச்செருக்கு மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லை" என்றும்,
"உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கேட்கவும்
இலகுசீருடை நாற்றிசை நாடுகள்
யாவும் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலகவாள் நுதலார் நங்கள் பாரத
தேசமோங்க உழைத்திட வேண்டும்" என்றும்,
"விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப்பெண்கள் விரைவில் ஒழிப்பர்"
"சாத்திரங்கள் பலபல கற்பர்
சௌரியங்கள் பலபல செய்வர்
மூத்த பொய்மைகள் யாவும் அழிப்பர்
மூடக் கட்டுகள் யாவும் தகர்ப்பர்
ஏத்தி ஆண்மக்கள் போற்றிட வாழ்வர்"

என்றும் சீனியன் பந்தலில் தேன்மாரியாகப் பொழிகிறான்.

"ஒவ்வொரு சமையற்காரியும் அரசாங்கத்தை நடத்தக் கற்றுத் தீரவேண்டு"மென்றார் புது உலகச் சிற்பி லெனின் அன்று. சோவியத் ஆட்சி அத்தகைய வாய்ப்பு அளித்தது புதுமைப் பெண்ணுக்கு.

பாரதியோ புதுமைப் பெண்ணோடு கூடி,

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்தவந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லைகாண் என்று கும்மியடி"

என்று கும்மியடித்தான், பாரதியின் கனவு இன்று நனவாகி வருகிறது நாடு முழுவதிலும்.

## வர்க்கப் போரைப் போற்றினான் வம்பர் வாழ்வைத் தூற்றினான்

உழவர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் 'வந்தனை' செய்து, சோம்பேறிச் செல்வகர்களை 'நிந்தனை' செய்கிறான் பாரதி. 'வீணருக்கு உழைக்கமாட்டோம்' என்று வர்க்கப் போர்க் கொடியை உயர்த்துகிறான். "கண்ணன்-என் தந்தை" என்ற பாட்டில், தன்னையே கண்ணனாகப் பின்வருமாறு சித்திரிக்கிறான்:

"ஏழைகளைத் தோழமை கொள்வான்—செல்வம்
ஏறியவர் தம்மைக் கண்டு சீறிவிழுவான்"

என்று கூறி, பாரதி பாட்டாளிகளின் தோழனாகவும், பணக் கொழுப்பர்களின் பகைவனாகவும் காட்சி அளிக்கிறான்.

"அரும்பும் வியர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரம் தொழில் செய்திடுவீரே!
பெரும்புகழ் உமக்கே இசைக்கின்றேன்
பிரமதேவன் கலையிங்கு நீரே"

என்று 'உலகத்தின் சிருஷ்டி கர்த்தாக்கள்' உழைப்பாளிகளே

என்றும் அவர்களே தனது புகழ்ச்சிக்குரியவர்களென்றும் கூறுகிருன்.

இந்தியத் தொழிலாளிகளும் விவசாயிகளும் பெரும் போர்களில் இறங்கு முன்பு—ஒரு அரசியல் சக்தியாக உருவாகு முன்பு—தொழிற்சங்க காங்கிரஸும் கிஸான் சபையும் தோன்றுவதற்கு முன்பு—வாழ்ந்தவன் பாரதி. ஆயினும் அந்த நாளிலேயே தொழிலாளர் பக்கம் நின்று வர்க்கப் போர்க்கொடியை உயர்த்தியதுதான் அவன் சிறப்பு.

அந்நாளில் கிடைத்த ஆதாரங்களை வைத்துக்கொண்டு மேனாட்டுத் தொழிலாள வர்க்கக் கிளர்ச்சிகளை ஆராய்ந்து, லெனினுடைய "அபேதக் கொள்கையின்" சிறப்பை ஒப்புக் கொள்கிருன். அது நம் நாட்டுக்கு "தீங்கு செய்யாது" என் கிருன். பாரதி இலக்கியத்தில் ஓரிடத்திலும் முதலாளி ஜமீன் தாரர்களை 'தர்மகர்த்தாக்கள்' ஆக்கும் 'சமரச ஞானம்' தலை காட்டவில்லை. உழவர், தொழிலாளர் பக்கமே தன் பக்கம் என்று கண்ட, கொண்ட பாரதி, தர்க்கரீதியாக முறையாக வளர்ந்து முடிவாக, மக்களை மன்னராக்கும் "புதிய பொது உடைமைச் சமூகத்தைக்" கண்டான். வாயார மனமார வாழ்த்தினன்.

## வயிற்றுக்குச் சோறிட வாழ்ந்தான்

இன்று எல்லோருடைய கண்ணையும் கருத்தையும் கவர்ந்து நிற்கும் முதற்பெரும் பிரச்சினை. உணவுப் பிரச்சினை. உணவுப் பஞ்சம் பொதுமக்களை நெருப்புச் சட்டியில் புழுவைப்போல் வறுத்துக்கொண்டிருக்கிறது.

"கஞ்சி குடிப்பதற் கிலார் — அதன்
காரணங்கள் இவையெனும் அறிவுமிலார்
பஞ்சமோ பஞ்சமென்று — நிதம்
பரதவித்து உயிர் துடிதுடித்துத்
துஞ்சி மடிகின்றார்"கள்.

பாரதி கண்ணிலும் இத்தகைய காட்சி அவனுடைய வாழ் நாளில் விழுந்திருக்கிறது.

மக்கள் நலத்தைவிட, தன்னலமே பெரிதென்ற போலி தேசபக்தர்கள் இன்றுபோல் அன்றும் இருந்திருக்கிறார்கள்,

"பஞ்சத்தும் நோய்களிலும்
பாரதர் புழுக்கள்போல்
துஞ்சத்தம் கண்ணுற் கண்டும் — கிளியே
சோம்பிக் கிடந்தாரடி"

என்றும்.

"தாயைக் கொல்லும் பஞ்சத்தைத்
தடுக்க முயற்சியுறார்
வாயைத் திறந்து சும்மா — கிளியே
வந்தே மாதரமென்பார்"

என்றும் பாடி, நடிப்புத் தேசபக்தர்களின் தோலை உரிக்கிறான்'

பதுக்கல் கொள்ளையிலும், கள்ளமார்க்கெட் திருட்டிலும் மூழ்கிக் கிடந்து, தேசீயப் போர்வையைப் போர்த்திக் கொண்டு மூவர்ணக் கொடியை வானளாவப் பிடித்து, "ஜேஹிந்த்" கோஷம் தொண்டை கம்மப்போட்டு, கபட நாடகமாடும் கயவர்களைச் சொல்லம்பால் குத்திக் குடலைப் பிடுங்கப் பாரதி இல்லையே என்று தோன்றுகிறது. ஆயினும், பாரதி பரம்பரையைக் காக்கும் பாவலர்களும், பால பாரதிகளும் துரோகம் செய்யமாட்டார்கள் என்ற நம்பிக்கை என் உள்ளத்தில் மங்கவில்லை.

"ஊருக்கு வயிறு நிறைய அன்னம் போடவேண்டும். இது தான் உத்தம தர்மம். இது முப்பாட்டனுருடைய தீர்மானம். என் தீர்மானமும் அப்படியே" என்று 'கட்டுரை' ஒன்றில் எழுதுகிறான் பாரதி.

உணர்ச்சியைப் பிழிந்து பொழிந்த ஒரு பாடலில்,

"இல்லையென்ற சொல்லை — உலகில்
இல்லையாக வைப்பேன்"

என்கிறான்.

'ஊருக்கு நல்லது' சொல்லி முரசறைகிருனே, அப்பொழுது பாடுகிருன்.

"வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர் — இங்கு
வாழு மனித ரெல்லோர்க்கும்;
பயிற்றி உழுதுண்டு வாழ்வீர் — பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டும்.
... ... ... ... ... ... ... ... ... ...
வயிற்றுக்குச் சோறிடவேண்டும் — இங்கு
வாழு மனிதருக் கெல்லாம்
பயிற்றிப் பலகல்வி தந்து — இந்தப்
பாரை உயர்த்திடவேண்டாம்"

என்று உணவு நெருக்கடி மிகமிக ஆழமாகி, மக்களின் உயிரையும், உயர்மானத்தையும் சூறையிடும் இன்று, "பிறர் பங்கைத் திருடும்" கயவர்கள் தேசபக்தர் உருவத்திலும் பாரதி அன்பர் வேஷத்திலும் ஒய்யாரமாக உலாவித்திரிவதை நினைந்தால் உள்ளம் குமுறுகிறது

## ஒப்பில்லாத சமுதாயம் கண்ட ஒரு தனிப் புலவன்

உணவுப் பஞ்சத்தைப் போக்க, பாரதி காட்டும் வழி என்ன?

"இனிய பொழில்கள் நெடிய வயல்கள்
எண்ணரும் பெரும் நாடு —
கனியும் கிழங்கும் தானியங்களும்
கணக்கின்றித் தரும் நாடு — நித்தநித்தம்
கணக்கின்றித் தரும் நாடு"

என்று நாட்டு வளப்பத்தை அழகுற வர்ணிக்கிருன். இத்தகைய நன்னுட்டில்,

"மனிதர் உணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனி யுண்டோ?

மனிதர்நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை யினி யுண்டோ?"

என்ற கேள்விகளை நாடதிரக் கேட்கிறான்—"இல்லை, இல்லை" என்ற பேரொலியுடன் மக்கள் திக்கெட்டுமிருந்து திரள்கின்றனர்.

"தாரணி விளக்கமாம் என்னரு நாட்டின்
தவப்பெய ரதன்மிசை யாணை"

"வீரர், நம்நாடு வாழ்கென வீழ்ந்த
விழுமியோர் திருப்பெய ராணை"

பஞ்சத்தைக் கிஞ்சிற்றும் அனுமதியோம் என்கிறான் பாரதி.

மக்கள் : "நினைப்பது முடியும்"

பாரதி : "இனி ஒரு விதி செய்வோம்"

மக்கள் : "அதை எந்த நாளும் காப்போம்"

(ஆர்கலியின் பேரொலிபோல் ஆரவாரம்)

பாரதி : "தனி ஒருவனுக்கு உணவில்லை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"

என்று உச்சஸ்தாயியில் கர்ச்சிக்கிறான்.

மக்கள் எல்லோரும்:

"பதுக்கல் கொள்ளைக்காரர் - ஜகத்தினை
அழித்திடுவோம் — கள்ளமார்க்கெட்
கயவர்கள் - ஜகத்தினை அழித்திடுவோம்"

என்று கோஷிக்கின்றனர். போருணர்ச்சியில் பேருணர்ச்சி கொண்ட மக்களை நோக்கி பாரதி சொல்கிறான்:

உணவு, உடை, உறையுள்—வாழ்க்கைக்கு உரிய பொருள்கள் முன்,

"எல்லோரும் ஓர்குலம்
எல்லோரும் ஓர்இனம்

எல்லோரும் ஓர் விலை
எல்லோரும் ஓர் நிறை''

என்று இந்த நன்னிலையைத் தருவது எது?

''ஒப்பிலாத புதிய பொதுஉடைமைச் சமுதாயம்'' என் இறுதியாகத் தெளிந்து உறுதியாகக் கூறுகிறான் பாரதி.

## சீரமைப்பு நாடிய தீங்கவிச் செல்வன்

பொதுப்படையாக லட்சியங்களை 'அற்புத' மாகச் சித்திரித்த வரகவி மட்டுமல்ல பாரதி. அவன், நாட்டின் எதிர்காலச் சீரமைப்புச் சிற்பியுங்கூட.

''மண்பயனுற வேண்டும்
வானகம் இங்குத் தென்படவேண்டும்''

என்று பாரதி மனம்நிறைய வேண்டுகிறான். 'பூலோகத்தில் சுவர்க்கலோகத்தை'க் காண வேண்டுமென்பதுதான் பாரதியின் கோரிக்கை, குறிக்கோள் எல்லாம்.

இவ்வாறு சீரமைப்பு வெற்றிபெற, பல 'இந்திர ஜால மகேந்திர ஜாலங்கள்' நடைபெற வேண்டுமென்கிறான் பாரதி. கூழாங் கல்லை வயிரக்கல் ஆக்குவது, செம்பைத் தங்கமாகச் செய்வது, புல்லை நெல்லெனப் புரிவது, ஆண்பன்றியை அடலேறு ஆக்குவது—இவை போன்ற 'விந்தைபுரியும்' சக்தியோடு சீரமைப்பில் இறங்க வேண்டுமாம். இந்நாட்டை,

''தொல்லை தீர்த்துயர்வு கல்வி — வெற்றி
சூழும் வீரம் அறிவாண்மை
கூடும் திரவியத்தின் குவைகள் — திறல்
கொள்ளுங் கோடிவகைத் தொழில்கள்—இவை
நாடும்படிக்கு வினைசெய்து — இந்த
நாட்டோர் கீர்த்தியெங்கு மோங்க — கலி
சாடும்திறம் எமக்கு வேண்டும்''

என்று மக்களின் பிரதிநிதியாக பூக்காரமிட்டுக் கேட்கிறான்.

வானகத்தை மண்ணகத்தில் இறக்கும் மாபெரும் திருப் பணிக்கு,

"தேட்டமின்றி விழிஎதிர்காணும்
தெய்வமாக விளங்கும்"

தொழிலாளர் உலகத்தையே மலைபோல் நம்புகிருன்.

தொழிலாளி என்னும்போது, யந்திரத் தொழிலாளி, விவசாயி, படிப்பாளி மூவரையும் ஒரே தட்டில் வைத்தே எடை போடுகிருன் பாரதி.

"இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவோரையும்,
யந்திரங்கள் செய்திடுவோரையும்,
உண்ணக் காய் கனி தந்திடுவோரையும்,
உழுது நன்செய்ப் பயிரிடுவோரையும்,
பாட்டும் செய்யுளும் கோத்திடுவோரையும்
பரதநாட்டியக் கூத்திடுவோரையும்
காட்டும்வையப் பொருள்களின் உண்மை
கண்டு சாத்திரம் சேர்த்திடுவோரையும்"

'மண்கண்ட தெய்வமாக' பாரதி வணங்கும் காட்சி, சிந்திக்கச் சிந்திக்கத் தெவிட்டாத இன்பம் பயக்கும். இத்தகைய தொழிலாளர்களோடு சேர்ந்து,

... ... ... ... ... "—தொழில்
பண்ணப் பெருநிதியம் வேண்டும்—அதில்
பல்லோர் துணைபுரிய வேண்டும்"

என்ற ஒரு கூட்டு அறிக்கையை விடுத்து, நாட்டின் சீரமைப்பில் இறங்குகிருன். தொழிலாளிகளும் படிப்பாளிகளும் பாரதியைச் சூழ்ந்து நின்றுகொண்டு,

"பொழுதெல்லாம் எங்கள் செல்வம்
கொள்ளை கொண்டு
போகவோ — நாங்கள் — சாகவோ
அழுது கொண்டிருப்போமோ, ஆண்பிள்ளைகள்
அல்லமோ — உயிர் வெல்லமோ?"

என்று ஆவேச நுரை வழியக் கேட்கிருர்கள். பிரிட்டிஷ் மூல தனச் சுரண்டல் கொள்ளை வாலைச் சுருட்டிக்கொண்டு, உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓட்டமெடுக்கிறது.

"ஜனங்களின் சங்க முழுமைக்கும் பொதுஉடைமை" யாகிறது பிரிட்டிஷ் பணமூட்டைகளின் சொத்து.

"நடையும் பறப்புமுணர் வண்டிகள் செய்வோம்
ஞாலம் நடுங்கவரும் கப்பல்கள் செய்வோம்
காவியம் செய்வோம் நல்ல காடு வளர்ப்போம்
கலைவளர்ப்போம் கொல்லர் உலைவளர்போம்
ஓவியம் செய்வோம் நல்ல ஊசிகள் செய்வோம்
உலகத் தொழிலனைத்தும் உவந்து செய்வோம்"

என்று 'பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த பசுந்தமிழில்' பாரதியோடு சேர்ந்து பாடுகிருர்கள் சீரமைப்பு ஜாம் ஜாமென்று திக்கெட்டு மெட்ட வெற்றி சூடுகிறது.

இம்பீரியல் கெமிகல்ஸ்–டாட்டா ஒப்பந்தம், நட்பீல்டு-பிர்லா ஒப்பந்தம், சர்சில்க்-லான்சில்ஸ் ஒப்பந்தம் போன்ற பிரிட்டிஷ்-இந்திய பணமூட்டைகளின் கூட்டுக் கொள்ளையால் நாடு சீரழிக்கப்படுகிறது அதேபொழுது, சுதந்தர சர்க்கார் தக்க திட்டத்தோடு சீரமைப்புப் பெரும் பணியில் இறங்க வேண்டிய தருணம். ஸ்டர்லிங் கடனுக்குப் பதில் பிரிட்டிஷ் மூலதனத்தைப் பறிமுதல் செய்யவேண்டுவதும், பெருந்தொழில் களைத் தேசியமயமாக்க வேண்டுவதும், விவசாயி–தொழிலாளி-படிப்பாளிகளிடத்தில் முழு நம்பிக்கைவைக்க வேண்டுவதும் சீரமைப்புத் திட்டம் மெய்யாகவே வெற்றிபெற இன்றியமையா தவை. இங்கு பாரதி நமக்கு எத்துணைச் சிறந்த வழிகாட்டியாக விளங்குகிருன் பாருங்கள்!

## பாரதி வழி வாழ்க !

தமிழ் மக்களின் சிறந்த பண்பாடுகளையும் உணர்ச்சி ஓட்டங்களையும் உய்த்தறிந்து, துய்த்தறிந்து உணர்ந்தவன் பாரதி.

தமிழ் மக்களின் எதிர்கால வாழ்வு எப்படியிருக்கும் என்று சித்திரித்தவன் பாரதி.

தமிழ் மக்களின் குறைகளை எல்லாம் எடுத்துக்காட்டி, அவற்றை ஒழிக்ம வழிகாட்டியவன் பாரதி.

தமிழ் மக்களின் முன்னேற்றப் பாதையில் கண்ட தடைக் கற்களைத் தூக்கியெறிந்து பாதையைப் புதுப்பித்தவன் பாரதி.

''பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம் விழிபெற்றுப் பதவிகொள்ள'', ''வெள்ளத்தின் பெருக்கைப் போல் கலைப் பெருக்கும், கவிப் பெருக்கும் மேவச்'' செய்தான் பாரதி.

> ''நமக்குத் தொழில் கவிதை, நாட்டுக் குழைத்தல்
> இமைப் பொழுதும் சோரா திருத்தல்''

என்ற அடிகளுக்கு இலக்காக வாழந்தவன் பாரதி.

பிரத்தியட்ச உண்மைகளையும் யதார்த்த நிலைமைகளையும் கலையின் அடிவாரங்களாகக் கொண்ட அருங் கலைவாணன் பாரதி.

''எழுத்தாளன், மனித ஆத்மாவை—மனித சிந்தனையைச் செம்மைப்படுத்தும் எஞ்ஜினீர்'' என்கிருர் ஸ்டாலின். தற்காலத் தமிழகத்தில் பாரதிக்கு நிகரான எஞ்ஜினீயர்—உயிர்க் கலைஞன்—மகாகவி—யாருமில்லை.

ஆகவே, ''பாட்டுக்கொரு புலவன் பாரதியடா'' என்று பட்டிக்காட்டானை—சாதாரணத் தமிழ் மகனைக் கொண்டு பாரதியைப் புகழ்ந்து பாடச் சொன்ஞர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

பாரதி காலத்திற்குப் பின் பாரதியை எந்தக் கவிஞனாலும் புறக்கணிக்க முடியவில்லை. எந்த எழுத்தாளனாலும் அலட்சியம் செய்ய இயலவில்லை. எந்த மக்களாலும், தலைவர்களாலும் கிளர்ச்சிகளாலும் அசட்டை செய்யமுடியவில்லை. அத்தகைய தனிப்பெரும் பீடத்தில் ஏறிக்கொண்டான்

பாரதி. ஆகவே இந்த சகாப்தத்தைப் "பாரதி சகாப்தம்" என்கிறார், அறிஞர் திரு. வி. க.

தேசிய கவி நாமக்கல் கவிஞர் தம்மை 'பாரதி பரம்பரை' என்பதில் பெருமை கொண்டாடுகிறார்.

தமிழகத்தின் இன்றைய தலைசிறந்த உயிர்க் கவிஞராகிய கனகசுப்புரத்தினமோ "பாரதிதாசனாகி" விட்டார்.

பாரதியின் பாஸ்வெல் வ. ரா, 'பாரதிதான் தமிழ்'' என்றால் வியப்பேது?

இளம் கவிகளும் எழுத்தாளர்களும் பாரதி வழியைப் பின்பற்றி, அன்றாடப் போராட்டங்களிலிருந்து இறுதி லட்சியமாகிய சுதந்தர இந்தியாவில் சுதந்தரத் தமிழகமாம் புதிய தமிழகத்தைக் காணும் பெரும் போராட்டம் வரையில் தமிழ்ப் பொது மக்களோடு தோளோடு தோள் நின்று அரும்பணி ஆற்றுவார்களாக!

பாரதி நூற்களும், பாரதி பாடல்களும் தனி உரிமைப் பிடிப்பிலிருந்து விடுபட, தமிழர்களின் பொதுவுடைமையாகிச் சிறப்புற, நாட்டன்பர்களும் அரசியலாரும் பொது மக்களும் முயன்று, பாரதி இலக்கியம் முழுப்பயன் தரச் செய்வார்களாக!

## குறிப்பு

பாரதி நூல்களை வெளியிடும் உரிமை திரு. விஸ்வநாத ஐயர் (பாரதியாரின் தம்பி) கையில் இருக்கிறது. பேசும் படம், வானொலி, இசைத்தட்டு இவைகளில் பாரதி பாடல்களைப் பாடுவதற்கான உரிமையை மெய்யப்பச் செட்டியார் ஒருவர் பணம் கொடுத்து விலைக்கு வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார்.

பாரதி இலக்கியம் தமிழ் மக்களின் பொதுஉடைமை— ஏன், உலகத்து மக்களுக்குக்கூட. காந்தி இலக்கியம்போல் பாரதி இலக்கியமும் பொதுஉடைமையாக—தனி உரிமையில் சிக்கிக்கிடப்பது விடுபட—தமிழ் மக்களும் சென்னை

சர்க்காரும் தகுந்த நடவடிக்கை எடுக்க உடனே முன்வர வேண்டும்.

"சேமமுற வேண்டுமெனில் தமிழ் முழக்கம்
தெருவெல்லாம் செழிக்கச் செய்வீர்!"

இது பாரதியின் ஆணை. இந்த ஆணையை நிறைவேற்ற பாரதி நூற்களை—இலக்கியத்தை யாரும் பதிப்பித்து வெளியிட உரிமை ஏற்படவேண்டும். பாரதியின் இளவல் திரு. விஸ்வநாத ஐயர் காலமறிந்து தாமே முன்வந்து, பாரதி நூல்களைப் பொதுஉடைமை ஆக்கவேண்டும். அப்போது தமிழ் மக்களின் நன்றி அவருக்கு என்றும் உரியதாகும். பணத்திற்கு ஆசைப்பட்டு, தனி உரிமைக்கே நின்றால் பழிதான் ஏற்படும். பாரதி குடும்பத்திற்கு—விஸ்வநாத ஐயர் உட்பட—ஒரு நல்ல நன்கொடை அளிக்கத் தமிழ் மக்கள் தயங்கமாட்டார்களென்று எதிர்பார்க்கலாம்.

"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்"

பாரதியின் இந்த ஆணையை நிறைவேற்ற பாரதி பாடல்கள் தங்கு தடையின்றி, வானொலி, இசைத்தட்டு, பேசும்படங்களில் தாராளமாகக் கேட்கப்பட வேண்டும். ஆகவே, மெய்யப்பச் செட்டியாரும் பாரதி பாடல்களில் வியாபாரம் நடத்துவதை ஒழித்து, தமிழ் மக்களின் நன்மதிப்பைப் பெற முன்வர வேண்டும்.

விஸ்வநாத ஐயரும், மெய்யப்பச் செட்டியாரும் தமிழ் மக்களின் வேண்டுகோளை நிறைவேற்றக் காலம் கடத்துவார்களானால், சென்னை சர்க்கார் பாரதி பாடல்களும் பாரதி இலக்கியமும் நாட்டிற்குப் பொது என்று பிரகடனம் செய்ய வேண்டும். அதற்காகத் தமிழ் மக்கள் முறையான, தீவிரமான கிளர்ச்சியிலும் நடவடிக்கைகளிலும் உடனே இறங்கித் தீர வேண்டும்.

---

* (1947 அக்டோபர் மாதம் எட்டயபுரத்தில் பாரதி மணி மண்டபத் திறப்பு விழாவன்று 'ஜனசக்தி' பிரசுராலயம் வெளியிட்டது.)

# கம்பனும் பாரதியும்

அறிவுசான்ற அவைத் தலைவர் அவர்களே!

கம்பனின் அன்பர்களே!

சகோதர, சகோதரிகளே!

இன்று எனக்குப் பேசக் 'கம்பனும்-பாரதியும்' என்ற பொருள் கொடுக்கப்பட்டிருக்கிறதென்பது உங்களுக்குத் தெரியும். எல்லாப் பேச்சாளர்களையும் விட இந்த விழாவில், உங்கள் தலையசைப்பைப்பெற எனக்குத்தான் அதிகக்கஷ்டம். எனக்கு அளிக்கப்பட்டுள்ள பொருள் தான் இதற்குக் காரணம். ஏன்?

கம்பனைப் பற்றி நீங்கள் பதினேழு ஆண்டுகளுக்கு மேலாக அறிமுகம் ஆனவர்கள். இந்தப் பதினேழு ஆண்டு களில் ஒவ்வொரு ஆண்டிலும், கம்பனை நன்ருகச் சுவைத் தறிந்த தமிழகத்தின் தலைசிறந்த அறிஞர்கள் பலர். அவரவர் கோணத்திலிருந்து, தங்களுக்கு ஏற்ற இசைவான முறையில் கம்ப விருந்து நடத்த அதை மனம் நிறைய அனுபவித்து களிக்கப் பேறும் வாய்ப்பும், தமிழகத்தின் இதர பகுதி மக்கள் பொருமைப்படத்தக்க விதத்தில் நீங்கள் பெற்று வந்திருக் கிறீர்கள். அத்தகைய வாய்ப்புப் பெற்ற உங்களிடையில் கம்பனைப்பற்றிப் பேசி, தலையசைப்பையும் கைதட்டலையும் பெறுவது எளிதான காரியமா? அதுபோலத்தான் பாரதியைப் பற்றியும். பாரதி தமிழகத்திற்கு மற்றெல்லாப் புலவர்களை யும்விட நன்கு அறிமுகமான பெரும் புலவன். உங்களுக்கும் மிக நன்ருக அறிமுகமான புலவர் பெருமான். பாரதியைப் பற்றி உங்களிடையில் பேசி, 'ஆஹா' என்ற பாராட்டுதலைப்

பெறுவதும் அத்தனை சுலபமான காரியமா? உங்களுக்கு நிரம்பப் பழக்கமான இரண்டு தமிழ் மகா கவிகளைப்பற்றி, உங்களுக்குப் புத்தம் புதுமையான செய்திகளை என்னால் சொல்ல முடியாவிட்டால், சொல்லும் வகையில் புதுமைபடச் சொல்ல முடியாவிட்டால், உங்களுடைய தலையசைப்பை நான் எவ்வாறு பெறமுடியும்?

முதலில் பாரதியை எடுத்துக் கொள்ளலாம். அப்பால் பாரதியின் வழி கம்பனுக்குப் போகலாம்.

பாரதி ஜனநாயகக் கவி; நாம் வாழ்கிற, நாம் அனுபவிக்கிற புதிய சூழ்நிலையில் உருவாகிய கவி. நமக்கு இதர எல்லாக் கவிகளையும்விடப் புரிய, தெரிய கவிமழை பொழிந்த கவி. இருபதாம் நூற்றாண்டைய கவி. தமிழ்க் கவிகளிலேயே நவீனக் கண்ணோட்டம் படைத்த கவி, நமக்கு தேசபக்தியை சுதந்தர தாகத்தை, புதிய வாழ்வு நாட்டத்தை, போதித்த கவி. நமக்கு உயிருக்குயிரான இனிமைமிக்க கவி.

பெரியர்களுக்கு,

“ஊருக்கு நல்லது சொல்வேன் — எனக்கு
உண்மை தெரிந்தது சொல்வேன்
சீருக்கெல்லாம் முதலாகும் — ஒரு
தெய்வம் துணை செய்யவேணும்”

என்று பாட ஆரம்பித்து, சென்ற நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டிலும் உலகம் முழுவதிலும் மேலும்மேலும் ஆதிக்கம் செலுத்தியவரும் நவீன உண்மைகளான, சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம் முதலிய உண்மைகளை, நமக்கு, நமது நாட்டு யதார்த்தச் சூழ்நிலைகளுக்கு ஏற்றபடி போதித்த கவி பாரதி.

தம்பிக்கு ‘புதிய ஆத்திசூடி’ வடித்து, அதில்,

‘அச் சந் தவிர்
தெய்வம் நீ என்றுணர்
வையத் தலைமை கொள்’

என்று அறிவுரை தந்த கவி பாரதி.

பாப்பாவுக்கு,

"உயிர்களிடத்தில் அன்பு வேணும்—தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்
வயிரமுடைய நெஞ்சு வேணும்—இது
வாழு முறைமையடி பாப்பா"

என்று பாடிப் பாப்பாவை ஆடவைத்த கவி பாரதி,

தமிழன் வாழ்வை, மனிதன் வாழ்வைப் புதிய பார்வையோடு பார்த்த பாரதி, நவீன விமர்சனக் கண் படைத்த பாரதி—கம்பனை எப்படி நிர்ணயிக்கிறான் என்பதை, நான் எப்படிப் பார்க்கிறேன் என்பதை உங்கள் முன் வைக்க விரும்புகிறேன்.

பாரதி தமிழில் எத்துணை ஈடுபாடு உடையவனோ, அத்துணை ஈடுபாடு உடையவன் கம்பன், வள்ளுவர், இளங்கோ ஆகிய முப்பெரும் தமிழ்ப் புலவர்களிடத்திலும். எங்கெங்கே பெருமைப்படத் தமிழ்ப் புலவர்களைக் குறிப்பிடுகிறானோ அங்கங்கே இந்த முப்பெரும் புலவர்களை பாரதி இணைத்துக் குறிப்பிடுவதை பாரதி இலக்கியத்தில் பரக்கக் காணலாம்.

## கல்வியில் பெரியவன் கம்பன்

செந்தமிழ் நாட்டை நினைத்து பாரதி செம்மாந்து பாடுகிறான் அல்லவா? அந்த "செந்தமிழ் நாடெனும் போதினிலே" என்ற பாட்டில், பாரதி கம்பனின் தன்மையையும் தரத்தையும் வரையறுத்துக் காட்டுவதைப் பாருங்கள்!

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு

இந்த இரண்டு வரிகளில் கம்பனைப்பற்றிய பாரதியின் ஒரு வரையறுப்பு காணக்கிடக்கிறது. இங்கு, "கல்வியில் பெரியவன் கம்பன்" என்று பாரதி முழுமூச்சோடு நிர்ணயிக்கிறான். "புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடு"; ஆகவே கல்வி சிறந்த தமிழ்நாடு என்று தீர்த்துச் சொல்கிறான். "பல்விதமாயின சாத்திரத்தின் மணம் பாரெங்கும் வீசும் தமிழ் நாடு" தான். ஆயினும் 'புகழ்க்

கம்பன் பிறந்ததால் கல்வி சிறந்த தமிழ்நாடு' என்று கணிக்கிருன். "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து, வான்புகழ் கொண்டது" தான் தமிழ் நாடு. அதுபோல் 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்றோர்—மணி ஆரம்படைத்தது' தான் தமிழ் நாடு. ஆயினும் "புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு" எனவே "கல்வி சிறந்த தமிழ்நாடு" என்றே பாரதி நிர்ணயிக்கிருன்.

பவணந்தி முனிவரின் 'நன்னூலி'லிருந்து, கா. நமசிவாய முதலியாரின் 'சிற்றிலக்கண வினு விடை' வரையில், இலக்கண நூல்களிலெல்லாம், ஐந்தாம் வேற்றுமை உருபான 'இல்' என்பதை வாக்கியத்தில் பொருத்திக்காட்ட, 'கல்வியில் பெரியவன் கம்பன்' என்ற வாக்கியத்தையே மேற்கொள் காட்டுகிருர்கள். ஐந்தாவது, ஆருவது வகுப்புப் படித்த மாணவ, மாணவிகளுக்குக்கூட இந்த உண்மை நன்ருகத் தெரியும். இன்று வரையில் 'கல்வியில் பெரியவன் கம்பன்' அல்ல என்று யாரும் மறுக்கத் துணியவும் இல்லை.

கம்பன் தமிழகத்தில் தோன்றிய பிறகு 'கல்வியில் பெரியவன் கம்பன்' தான். பாரதியின் நிர்ணயிப்பும் இதுதான். எனினும் எனது பேச்சுக்கு இந்த நிர்ணயிப்பு முக்கியமல்ல.

## கம்பனுக்கே முதலிடம்

பாரதியின் கம்பனைப்பற்றியே மற்ருெரு நிர்ணயிப்பு என்ன?

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்,
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை; உண்மை
வெறும் புகழ்ச்சி யில்லை"

என்பது.

பாரதி, தமிழைப்பற்றிப் பாட, ஆவேசம் கடல்மடை திறந்து பாய்ந்தபொழுது, தமிழைப்போல் இனிய மொழி

உலகில் வேறு இல்லை என்று பாடுகிறான்; தமிழ்ப் புலவர்களான கம்பனைப்போல், வள்ளுவர்போல், இளங்கோவைப்போல் உலகத்தில் எங்கும் பிறந்ததில்லை என்று பாடுகிறான். இது உண்மையென்றும் உறுதி கூறுகிறான். பன்மொழிப் புலமை வாய்ந்த பாரதி, உலக மகாகவிகளைக் கற்றறிந்து, ஒப்பு நோக்கியே மேற்படி முப்பெரும் புலவர்களை முதல் வரிசையில் வைக்கிறான். காலத்தால் வள்ளுவனும், இளங்கோவும் கம்பனுக்கு முந்தியவர்களேனும், பாரதி வரிசைப் படுத்தும்பொழுது, கம்பனை முதல்வரிசையில் முதலில் வைத்தே பாடுகிறான். பாட வேண்டுமென்று விரும்பினால் வள்ளுவனையோ, இளங்கோவையோ முதலில் வைத்து பாரதிக்குப் பாடமுடியாதா, என்ன? முடியும். பின் ஏன் கம்பனை முதலில் வைத்துப் பாடுகிறான்? கம்பன்தான் உலகப் பெரும் புலவர்கள் யாவரினும், பெரும்புலவன் என்பது அவன் மதிப்பீடு. நாம் எவ்வாறு மதிப்பிடுகிறோம் என்பது வேறு விஷயம். பாரதியின் அழுத்தந்திருத்தமான நிர்ணயிப்பு, கம்பனுக்கே முதலிடம் கொடுக்கிறது என்று நான் பார்க்கிறேன்.

“கன்னனொடு கொடைபோயிற்று; உயர்கம்ப
நாடனுடன் கவிதை போயிற்று;
உன்னரிய புகழ்ப்பார்த்த னொடுவீரம்
அகன்றதென உரைப்பர் ஆன்றோர்”

என்று பாரதி பிறிதோரிடத்தில் பாடுவதும், கவிதை உலகில் கம்பனுக்குத்தான் முதலிடம் அளிக்கிறான் என்பதையே தெளிவுபடுத்துகிறது.

கம்பன் தன்னேரிலாத புலவன் என்பது பாரதியின் வரையறுப்பு, எனினும் இதுவும் எனது பேச்சுக்கு முக்கியம் அல்ல.

## எல்லையற்றதை எட்டிப் பிடிப்பவன்

கம்பனைப்பற்றிய பாரதியின் இன்னொரு வரையறுப்பைக் கேளுங்கள்! “விதியே தமிழ்ச்சாதியை என்செயப் படைத்

தாய்?'' என்றொரு அகவற்பா பாரதி பாடியிருக்கிறான். ''தமிழச் சாதி'' என்ற தலைப்பில் இப்பொழுது அந்த அகவற்பா வெளியிடப்பட்டிருக்கிறது. அதில் நமது முப்பெரும் புலவர்மணிகளைப் பற்றியும், அவர்களுடைய படையல்களைப் பற்றியும் பாரதி பின்வருமாறு விதந்தோதியிருக்கிறான்:

''சிலப்பதிகாரச் செய்யுளைக் கருதியும்
திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும்,
'எல்லையொன் றின்மை' எனும் பொருள் அதனைக்
கம்பன் குறிகளால் காட்டிட முயலும்
முயற்சியைக் கருதியும், முன்புநான் தமிழச்
சாதியை அமரத்தன்மை வாய்ந்தது
என்று உறுதி கொண்டிருந்தேன்.''

இங்குப் பாரதி கம்பனை எடைபோட முயலும் அதிசய முயற்சியைப் பாருங்கள்! ''எல்லையொன் றின்மை'' எனும் பொருளை, கம்பன் குறிகளால் காட்டிட முயலும் அசகாய சூர, அசுர, அற்புத முயற்சியைச் சுட்டிக் காட்டுகிறான். இந்த கம்ப முயற்சியின் நிகரற்ற சிறப்பைப் பற்றிய பாரதியின் நிர்ணயிப்பை நீங்களே ஆழ்ந்து ஆழ்ந்து சிந்தித்து முடிவுகட்டுங்கள் என விட்டுவிடுகிறேன். இந்த நிர்ணயிப்பும் எனது பேச்சுக்கு முக்கியமல்ல.

கம்பனைப் பற்றியே பாரதியின் வேறொரு நிர்ணயிப்பைக் கவனிப்போம்.

பாரதி, தனது சுயசரிதையைப் பாடும்பொழுது பின் வரும் சில அடிகளைப் பாடுகிறான்:

''கம்பனென்றொரு மானிடன் வாழ்ந்ததும்,
காளிதாசன் கவிதை புனைந்ததும்,
... ... ... ... ... ... ... ... ... ...
சேரன் தம்பி சிலம்பை இசைத்ததும்
தெய்வவள்ளுவன் வான்மறை தந்ததும்''
... ... ... ... ... ... ... ...
அன்ன யாவும் அறிந்திலர்.

இங்குச் சேரன் தம்பியான இளங்கோவின் சிலப்பதிகாரப் பெருமையைச் சுட்டிக் காட்டுகிறான். தெய்வ வள்ளுவனின் திருக்குறள் மகிமையை எடுத்துரைக்கிறான். ஆனால் கம்பனின் இராம காதையைக் குறிப்பிட்டு, கம்பனுடைய கவிதா விலாசத்தை மேம்படுத்தவில்லை. கவிதைப் பெருமையைச் சொல்லும் பொழுது "காளிதாசன் கவிதை புனைந்ததும்" என்றே சொல்கிறான். காளிதாசன் கவிதைகளில் பாரதி மிகவும் ஈடுபாடுடையவன் என்பது நமக்குத் தெரியும்,

"தெய்வீகச் சாகுந்தலம் எனும் நாடகம்
செய்தது எவர் கவிதை—அயன்
செய்வதனைத்தின் குறிப்புணர் பாரத
தேவி அருட்கவிதை"

என்று வேறோரிடத்தில் பாடி, தனக்குக் காளிதாசனின் நாடகங்களிலும் கவிதை வளத்திலும் எவ்வளவு ஈடுபாடு உண்டு என்பதைக் காட்டுகிறான். ஆகவே, அவன் காளிதாசன் கவிதையைப் புகழ்ந்ததில் ஆச்சரியமில்லை: ஆனால் எங்கும் வள்ளுவனோடும் இளங்கோவோடும் கம்பனைத் தமிழ்ப் புலமையில் ஒரு வரிசைப்படுத்திக் காட்டியிருக்கிற பாரதி, இங்கு அவ்வாறு வரிசைப்படுத்தாததும். "கம்பனோடு கவிதை போயிற்று" என்று பாடிய பாரதி இங்குக் காளிதாசன் கவிதையோடு கம்பன் கவிதையும் இணைத்து வரிசைப்படுத்தாததும் உண்மையில் நமக்கு ஆச்சரியத்தை அளிக்கும். ஆனால் ஆச்சரியத்திலும் ஆச்சரியம் அளவளாவக் கம்பனை எவ்வாறு புகழ்கிறான் தெரியுமா? "கம்பன் என்றொரு மானிடன்" என்று புகழ்கிறான். ஆம் மானிடனாகப் பிறந்த ஒருவனுக்கு 'ஒரு மானிடன்' என்ற புகழைவிடப் பெரும்புகழ் வேறில்லை அல்லவா?

## கம்பன் ஓர் மானிடன்

பாரதியின் வரையறுப்பில் கம்பன் கவிச் சக்கரவர்த்தி—கம்பன் ஒரு மானிடன் (Kamban the greatest poet and the man). ஆனால், 'கம்பன் ஒரு மானிடன்' என்ற வரை

யறுப்பைத்தான் நான் எனது பேச்சுக்கு மிக முக்கியமான வரையறுப்பாக எடுத்துக் கொள்கிறேன்.

கிரேக்க நாட்டில் ஒரு ஞானி, பண்டு, பட்டப்பகலில் கையில் ஒரு விளக்கைப் பிடித்துக்கொண்டு, ஏதன்ஸ் நகரின் நடுத்தெருக்களில், ''ஒரு மனிதன் தேவை'' (Wanted a man) என்று அலைந்து திரிந்தான். நமது பாரதியோ கம்பனில் 'ஒரு மானிடனை'க் கண்டான்.

பாரதி, கம்பனை, கவிச்சக்கரவர்த்திகளில் முதல்வன் என்று அழைத்ததற்கும் மேலாக 'ஒரு மானிடன்' என்று ஏன் பாராட்டுகிறான்? 'பாம்பின் கால் பாம்பறியும்' என்பதுபோல், மகாகவியாகிய கம்பனுடைய மகா காவியத்தில் மூங்கி மூழ்கிய மகாகவியாகிய பாரதி, கம்ப காவியம் 'பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற' மானிடமயமாகப் பொங்கி வழிவதைக் காண்கிறான். கம்ப சித்திரங்கள் 'மானிடத்தை' ஆழமாகவும், விரிவாகவும், நுட்பமாகவும், 'அழகெனும் அழகும் ஓர் அழகு பெற'ச் சித்திரித்துக் காட்டுவதைப் பார்க்கிறான். 'கம்பன் ஓர் மானிடன்' என்று நிர்ணயித்து, அந்த நிர்ணயிப்பை உலகறிய முழக்குகிறான்.

கடந்த ஆயிரம் ஆண்டுகளில் கம்பனைப்பற்றி யாரும் நிர்ணயிக்காத 'கம்பன் ஓர் மானிடன்' என்ற புதிய நிர்ணயிப்புக்கு பாரதி வருகிறானல்லவா? இதை யறிய, பாரதியின் வாழ்க்கைக் கண்ணோட்டம் என்ன என்பதை ஊன்றிக் கவனித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வாறு தெரிந்து கொள்ள பாரதி இலக்கிய முழுவதிலும் தேசீயப் பாடல்கள், தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், இதர இலக்கியங்கள் முழுவதிலும் — சில சொற்கள் அடிக்கடி பயிலப்படுகின்றன. அவை, எந்த இடத்தில் என்ன பொருளில் வழங்கப் படுகின்றன என்பதைக் கண்டுபிடிக்க முயல வேண்டும்.

'கிருதயுகம்', 'அமர நிலை', 'இங்கு' ஆகிய சொற்கள் பலவிடங்களிலும் பயிலப்படுவதை ஊன்றி நோக்கி, அவற்றின் கருத்துக்களைப் பொருத்திப் பார்ப்போமானால், பாரதி

யின் தத்துவ தரிசனத்தை — வாழ்க்கைக் கண்ணோட்டத்தைக் காணமுடியும் என்று நான் கருதுகிறேன்.

## இவ்வுலகிலேயே நல்வாழ்வு

முதன்முதலில் 'இங்கு' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம்: 'இங்கு' என்ற சொல்லை, 'இந்த உலகத்தில்' 'இந்த ஜன்மத்தில்' 'இம்மையில்' என்ற பொருள்பட பாரதி எவ்வாறு உபயோகப் படுத்துகிறான் என்பதை உன்னித்து நோக்குங்கள்.

'தமிழ்' என்ற பாட்டில் :

"தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்
இங்கு அமரர் சிறப்புக் கண்டார்"

என்று பாடுகிறான்.

'வேண்டும்' என்ற கவிதையில்,

"மண் பயனுற வேண்டும்
வானகம் இங்குத் தென்பட வேண்டும்"

என்கிறான்.

'அறிவே தெய்வம்' என்ற பாட்டில்,

"கவலை துறந்து இங்கு வாழ்வதே வீடு எனக்
காட்டும் மறைகளெல்லாம்"

என்று பாடுகிறான்.

'ஜீவன் முக்தி' என்ற பாட்டில்,

"ஐயமுண்டு பயமில்லை மனமே—இந்த
ஜன்மத்திலே விடுதலையுண்டு நிலையுண்டு"

என்று பாடுகிறான்.

'சொர்க்கமோ', 'மோட்சமோ', 'கைலாசமோ', 'வைகுண்டமோ' இந்த வாழ்நாளில், இந்த உலகத்தில், கண் கூடாக, அனுபவ சாத்தியமாகக் கிடைக்கப் பெறவேண்டும் என்பது பாரதியின் அசைக்க முடியாத கோரிக்கை. ஆகவே,

கற்பனையில் எங்கோ இயங்குகிற 'வானகம்' இங்கு முளைக்க வேண்டும் என்று வேண்டுகிறான். கவலையற்று இந்நில உலகில் வாழ்வதுதான் 'மோட்சம்' என்று வேத சாட்சியாகக் கூறுகிறான். இந்த ஜன்மத்தில் விடுதலையும், நிலையான வாழ்வும் உண்டு என்ற முற்றமுடிந்த முழு நம்பிக்கையை அள்ளி வீசுகிறான்.

இது மட்டுமல்ல. இந்த வாழ்வுக்கு அப்பால் 'மறுமை' யில் நம்பிக்கை வைப்பதையும் வேரோடு பிடுங்கி எறிகிறான்.

"செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திடலா மென்று எண்ணி யிருப்பார்
பித்த மனிதர் அவர் சொலும் சாத்திரம்
பேயுரையாம் என்று ஊதேடா சங்கம்"

செத்த பிறகு நம்பிக்கை வைக்கும் மனிதரைப் பித்தர் என்றும் அவர் பேசும் சாத்திரம் பேயுரை என்றும், கண்டனக்கணை பாய்ச்சுகிறான். இதைவிட மறுஉலக நம்பிக்கையை, மறு பிறப்பு எண்ணத்தைத் தாக்கித் தகர்ப்பது எப்படி? நீங்கள் உடன்படுகிறீர்களோ, முரண்படுகிறீர்களோ, பாரதியின் ஐயந்திரிபுக்கு இடமற்ற கருத்து இது.

செத்த பிறகு எந்த வாழ்வும் இல்லை என்கிறான். இங்கேயே 'வானக' வாழ்வு வேண்டும் என்கிறான். சான்றோர்களின் லட்சிய வாழ்வான முழுநிறை இன்ப நல்வாழ்வு இந்தப் பிறப்பிலேயே மனித வர்க்கம் முழுமைக்கும் கைகூட வேண்டும் என்பதுதான் பாரதியின் தனி விருப்பம்.

## சமதர்ம அமர நிலை

இரண்டாவதாக 'அமர நிலை' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். உயர் மனிதன், அப்பழுக்கற்ற, பண்பட்ட மனிதன், வாழ்வாங்கு வாழும் மனிதன், மானிடம் கைவந்த மனிதன் — இத்தகைய மனிதனின் தரத்தை அமரநிலை என்று அழைக்கிறான் பாரதி.

அங்கங்கே இக்கருத்தை அவன் வெளியிடும் விந்தையைப் பாருங்கள். 'விநாயகர் நான்மணிமாலை' என்ற நூலில்,

"விடத்தையும் நோவையும் வெம்பகை யதனையும்
துச்சமென் றெண்ணத் துயரிலா திங்கு
நிச்சலும் வாழ்ந்துநிலை பெற்றோங்கலாம்;
அச்சம்தீரும்; அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி ஓங்கும்;
அமரத்தன்மை எய்தவும்
இங்குநாம் பெறலாம்; இஃதுணர்வீரே!"

என்று பாடுகிறான்.

"கண்ணன் திருவடி" என்ற பாட்டில்,

"இங்கே அமரர்
சங்கம் தோன்றும்
மங்கும் தீமை
பொங்கும் நலமே"

என்று பாடுகிறான்.

"முப்பதுகோடி ஜனங்களின் சங்க
முழுமைக்கும் பொது உடைமை
ஒப்பிலாத சமுதாயம்
உலகத்துக்கொரு புதுமை"

என்று பாடுகிறானே 'பாரத சமுதாயப் பாட்டு'. அந்தப் பாட்டில்,

"எல்லோரும் அமரநிலை எய்தும் நன்முறையை
இந்தியா உலகிற்கு அளிக்கும்—ஆம்
இந்தியா உலகிற்கு அளிக்கும்"

என்று பாடும்பொழுது 'அமர நிலைக்கு' அர்த்தமென்ன என்று ஆழ்ந்து சிந்தியுங்கள்.

"எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஓரினம்
எல்லாரும் இந்திய மக்கள்
எல்லாரும் ஓர்நிறை எல்லாரும் ஓர்விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்—நாம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர்—ஆம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர்"

எனப் பெருமிதத்தோடு பாடுகிறனே, அந்த நிலையைத்தானு, அந்த சமதர்ம ஜனநாயக நிலையைத்தானு 'அமர நிலை' என்கிறன்? அந்த 'அமர நிலை' யைத்தானு இந்தியா உலகிற்கு அளிக்கும் என்கிறன் என்பதையும் தீர்க்கமாகச் சிந்தித்துப் பாருங்கள்!

## பாரதி காணும் கிருதயுகம்

மூன்ருவதாக 'கிருதயுகம்' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். மானிட வர்க்கத்தின் லட்சிய வாழ்க்கையை, புதிய சமுதாய வாழ்க்கையை, 'கிருதயுகம்' என்ற சொல்லால் பாரதி அழைக்கிருன் என்று, அவனுடைய இந்தச் சொற்பிரயோகத்தைப் பரக்கப் படிக்கும்பொழுது எனக்குப்படுகிறது. பாரதி 'கிருதயுகம்' என்ற சொல்லைப் பல இடங்களில் உபயோகித்திருக்கிருன். 'அமர யுகம்', 'சத்ய யுகம்' என்ற சொற்களையும் அதே பொருளில் இரண்டொரு இடங்களில் உபயோகித்திருக்கிருன். 'அவன் 'கிருத யுகம்' என்ற சொல்லை எந்தப் பொருளில் உபயோகித்திருக்கிருன் என்பதற்கு ஒன்றிரண்டு எடுத்துக் காட்டுகளைத் தருகிறேன்.

'விநாயகர் நான்மணிமாலை'யில் ஓரிடத்தில்,

"பொய்க்கும் கலியை நான் கொன்று
பூலோகத்தார் கண்முன்னே
மெய்க்கும் கிருத யுகத்தினையே
கொணர்வேன் தெய்வவிதி இஃதே"

என்று கூறுகிருன். மற்ருேரிடத்தில்,

"நல்லகுணங்களே நம்மிடை அமரர்
பதங்களாம், கண்டீர், பாரிடை மக்களே!
கிருதயுகத்தினைக் கேடின்றி நிறுத்த
விரதம்நான் கொண்டனன்"

என்று பாடுகிறான்.

இங்கே பாரதி மனித குலத்தை, கலியுகம் முடியும் வரை காத்திருக்கச் சொல்லவில்லை. கிருதயுகம் மலரும் வரை பொறுத்திருக்கச் சொல்லவில்லை; பொய் வாழ்வை, போலி வாழ்வை ஆதாரமாகக் கொண்ட கலியுகத்தை ஒழித்துக்கட்டி, மானிடத்தின் வெற்றியான கிருதயுகத்தினை 'பூலோகத்தார் கண்முன்னே' நிலைநாட்டுவேன் என்று உறுதி கூறுகிறான். இது, தான் கேட்டு வந்த வரம் என்கிறான். தனது குறிக்கோள் என்கிறான்.

'ஜார் வீழ்ச்சி' என்ற பாட்டில்,

"இடிபட்ட சுவர்போலே கலிவிழுந்தான்
கிருதயுகம் எழுகமாதோ"

என்று பாடுகிறான்.

இங்கே ஜாரின் வீழ்ச்சியைக் கலியுகத்தின் வீழ்ச்சியாகவும், சோவியத் மலர்ச்சியை கிருதயுகத்தின் எழுச்சியாகவும் பாரதி பார்க்கிறான். பழைய பஞ்சாங்கப்படி, கலியுகம் மறைய, கிருதயுகம் பிறக்க பாரதி காத்திருக்கவில்லை.

இப்பொழுது நீங்கள் உணர முடியும், நான் பாரதியின் வாழ்க்கைக் கண்ணோட்டத்தை எவ்வாறு பார்க்கிறேன் என்பதை. மனிதர்கள் 'இங்கு' 'அமரநிலை' எய்தும் 'கிருதயுகம்' பாரதியின் வாழ்க்கைக் கண்ணோட்டம், மானிடம் நிறைந்த ஓர் புத்தம் புதிய சமுதாயம் பாரதியின் வாழ்க்கைக் கண்ணோட்டம்.

இந்தக் கண்ணோட்டத்தோடு பாரதி கம்பனைப் பார்க்கிறான். 'கம்பன் - ஓர் மானிடன்' என்று நிர்ணயிக்கிறான்.

## மகாகவி யார்?

தன்கால வாழ்வின் இனிமையை இன்னும் பெருக்குகிற வனும், தன்கால நாகரிகத்தை இன்னும் உயர்த்துகிறவனுமே மகாகவி என்ற பேருக்குத் தகுதியுடையவன் என்று இந்தியா வின் தலைசிறந்த தத்துவ முனியும், இந்தியக் குடியரசின் உதவி ஜனாதிபதியுமாகிய டாக்டர் இராதாகிருஷ்ணன் தாம் எழுதிய "இந்தியப் பெரியார்கள்" என்ற நூலில் ரவீந்திர நாத தாகூரைப் பற்றி எழுதும்பொழுது குறிப்பிடுகிறார். அதோடு மட்டுமல்ல; அப்பெரியார், தாகூர் இலக்கியத்தில் விரவிக் கிடக்கும் முக்கியமான மூன்று அம்சங்களையும் சுட்டிக் காட்டுகிறார். அவை : (1) உள்வாழ்வின் நேர்மை, உள் வாழ்வின் பயிற்சி ஆகியவற்றின் விளைவாக ஏற்படும் ஆத்மீக மதிப்பீடுகளின் இறுதித் தன்மை; (2) வாழ்வை மறுப்பது அல்லது துறப்பது ஆகியவற்றின் கையாலாகாத் தன்மை — (3) கடைப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர் உள்ளிட்ட எல்லோ ரிடமும் நேரடியாக அன்பும் அருளும் காட்டும் மனப் பான்மை.

இந்த மனித வாழ்வின் சீரிய அம்சங்களை, பாரதியிடம் பார்க்கக் காணலாம்; கம்பனிடம் கேதேர்ந்த விதத்தில் அவன் அருளிய மானிட மகா காவியம் முழுவதிலும் பார்க்கலாம்.

"உண்மையான கவிதையில் கவிஞனின் இதயம் மலர் கிறது; கற்பனை மலர்கிறது; மொழிதளம் மலர்கிறது; மானிட ஆர்வம் மலர்கிறது; உணர்ச்சி மலர்கிறது; சிந்தனை மலர்ந்து சிறகடித்துப் பாய்ந்து செல்கிறது" என்று ஆங்கில இலக்கிய ஆராய்ச்சி மன்னனாகிய கோலரிட்ஜ், ஷேக்ஸ் பியரைப் பற்றிக் கூறும் பொழுது கூறுகிறான். இவை இத்தனை யும் இதற்கப்பாலும் நாம் கம்பன் கலைக் கோவிலில் கவிதை நடனத்தில் கண்டுகளிக்கலாம்.

"போற்றலும் பெருந்திறனும் மட்டும் ஒருவனைக் கலைஞனாக்கி விடாது : அவன் படையலின் பின் ஒரு மனிதன்

காட்சியளித்தாக வேண்டும்'' என்று அமெரிக்க ஞானியான எமர்சன், கத்தே என்ற ஜெர்மன் மகாகவியைப் பற்றிக் கூறும் பொழுது குறிப்பிட்டுச் சொல்கிறான்.

கம்ப சித்திரங்கள் முழுவதிலும், எமர்சன் குறிப்பிடும் 'மனிதன்' பின்னணியில் நின்று காட்சியளிப்பதைக் காணலாம்.

''செத்ததன்மை முழுவதையும்
விழி நெருப்பு உமிழ வெறுத்துத் தள்ளு;
வாழ்வின் சகல வகைகளையும்
உச்சிமேல் வைத்து மெச்சு''

என்று சோவியத் மகா கவியாகிய மாயகோவ்ஸ்கி பாடுகிறனே-இந்த வாழ்வின் வீறை, விறலைக் கம்பன் காவிய முழுவதிலும் முழுவடிவத்தில் காணலாம்.

வாழ்வைக் கட்டிக்காக்கும் மானிடப் பெரும்படையின் அணிவகுப்பில் ஒவ்வொரு மனிதனையும் போர்வீரனுக்கி நிறுத்துவதிலும், பிரபஞ்ச முழுவதிலும் கம்பீர நடைபோட்டுச் சுற்றிவர நாடும் பேராவலை ஊட்டுவதிலும் உலக மகாகவிகளில் கம்பனுக்குக் கம்பனே நிகர்.

''குருதியிலே கரைந்த நெருப்பைப் போலக்
காதல் தாகம் கவிதையை நிறைக்கவேண்டும்
லட்சியமற்ற கவிதை உயிரற்றது.
அதன் வேகம் அணையும் நெருப்பை ஒத்தது.
சிறந்த கலைஞன் இயற்கையைப் பயன்படுத்தித்
தன்லட்சியத்தை வெளியிடுகிறான்;
அவன் புது உலகைச் சிருஷ்டிக்கிறான்
நமக்குப் புத்துணர்ச்சி ஊட்டுகிறான்''

என்று மகாகவியான மகமத் இக்பால் கூறுகிறான்.

''ஆழ்ந்த தத்துவ ஞானியாக இல்லாத எவனும் இதுவரை ஒரு மகாகவியாக இருந்ததில்லை'' என்று கோலரிட்ஜ் என்ற விமர்சகப் பேராசிரியன் கூறுகிறான்.

"நமக்கு நன்னம்பிக்கையூட்டி லட்சிய உறுதியோடு வாழ்க்கையின் கடிய, கொடிய சோதனைகளை அசையாத ஆண்மையோடு சகிக்கப் பண்படுத்தும் கலை எதுவோ அதுவே சிறந்த கலை" எனத் தமதுகால அரபிக் கவிதைகளைப்பற்றி நபிகள் நாயகம் கூறுகிறார்.

"அறம் வெல்லும் பாவம் தோற்கும்" என்ற மகத்தான மானிட லட்சியத்தை மலைபோல் முன்னிறுத்திப் பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து தீம்பாற்கடலைப் பொழிகிறான் கம்பன்.

கம்ப காவியத்தில் திளைத்த பாரதி "கம்பன் என்று ஒரு மானிடன் வாழ்ந்ததும்" என்று பாடுகிறான்.

இனி மானிட சித்திரங்களாகிய கம்ப சித்திரம் சிலவற்றை உங்கள் முன் வைக்கிறேன்.

உடற் பண்பிலும் உள்ளப் பண்பிலும் நிறைகுடமாக விளங்கும் இராமலட்சுமணரை, ஒரு மலையின் முகட்டில் கம்பன் கொண்டுவந்து நிறுத்துகிறான்.

## மானுடம் வென்றது

இராமனைப் பற்றியும் இலக்குவனைப் பற்றியும் அனுமன் வாயிலாகச் செவியாரக் கேட்ட சுக்ரீவன், அவர்களைக் கண்டு களிக்க வருகிறான். வருகிற வழியில், ஒரு திருப்பம் திரும்பியதும் இராம லட்சுமணர்களின் உருவங்களைத் திடீரென்று காண்கிறான். இயற்கையின் படைப்பில் இப்படியும் அற்புதம் நிகழுமா என்று மூக்கில் விரலை வைத்துக்கொண்டு, ஒரே அதிசயத்தில் மூழ்கி விடுகிறான். பின்னர், 'ஆஹா! சரி, சரி' என்று ஒரு முடிவுக்கு வருகிறான். 'தேவர்களுக்கெல்லாம் மேலான தேவர்கள் தங்கள் பிறப்பை மாற்றிக்கொண்டு மனிதப் பிறப்பெடுத்து, இங்கு வந்திருக்கிறார்கள். இதில் துளியும் ஐயம் இல்லை!' என்று வீரனான சுக்ரீவன் ஆனந்த பரவசமடைகிறான். அப்பால், 'சிவபெருமானையும், பிரம்மனையும் மற்றுமுள்ள கடவுளர்களையும் மானிடம் - மானிட வாழ்வு

வென்று விட்டது. நிச்சயமாகவும் வென்றுவிட்டது' என்று வாய்விட்டுக் கூறுகிறான்.

கம்பன் பாட்டைக் கேளுங்கள் :

தேறினன்; அமரர்க் கெல்லாம்
தேவராம் தேவர் தாமே
மாறிஇப் பிறப்பில் வந்தார்
மானுட ராக மன்னோ!
ஆறுகொள் சடலத் தானும்
அயனும் என்றிவர்க ளாதி
வேறுள குழுவை எல்லாம்
மானுடம் வென்ற தம்மா!

கம்பன் தனது காவியத்தின் நடுநாயகப் பாத்திரமான இராமனில் மானிடத்தின் கொடுமுடியைக் காட்டுகிறான். காட்டி - மானிடப் பிறப்பு வேறுள பிறப்பை எல்லாம் வென்று விட்டது என்று கூறி மனித மாண்பை விண்முட்டத் தூக்கிப் பிடிக்கிறான். இந்தக் கம்ப சித்திரத்தைக் காண்கிற நாம், புது உலகக் கலைஞனை மாக்ஸிம் கார்க்கி சொன்னதுபோல், "மனிதன்! எத்துணை மகா மந்திரச் சொல்" என்று வியக்க நேருகிறது.

பின்னால் சுக்ரீவன் கண்டு, "வேறுள குழுவை யெல்லாம் மானிடம் வென்றதம்மா" என்று இறும்பூதெய்தும்படி செய்த இராமன், முன்னால் மாமுனிவனான வசிட்டன் பார்வையில் எவ்வாறு படுகிறான் என்பதைக் கம்பன் சொல்லக் கேளுங்கள்.

தசரதன் ஆட்சி பீடத்தைத் துறக்க நினைக்கிறான். வசிட்டன் முதலான அமைச்சர்களை சபைக்கு வரச்செய்கிறான். அவர்களைப் பார்த்து, "நாட்டையும் மக்களையும் இராமன் செவ்வையாகப் பாதுகாக்கும் திறமுடையவன் தானா? உங்கள் கருத்து என்ன?" என்று கேட்கிறான். அதற்கு வசிட்டன் பின்வருமாறு பதிலிறுக்கிறான் :

"தரும தேவதையே இராமனாக அவதரித்திருக்கிறது என்று சொல்வதைவிட வேறு என்ன சொல்லக் கிடக்கிறது? பிரம்மனும், திருமாலும், சிவபெருமானும் — படைப்பு, பாது காப்பு, அழிப்பு என்ற மூன்று தத்துவங்களாக நின்று உலகத்தை அழகாக அமைத்து வைத்திருக்கின்றனர். ஆயினும் இயற்கையின் திருத்தத்தையும் திருத்தவல்ல பேரறிவும் பேராற்றலும் வாய்ந்த மனிதனும் பிறக்கிறான். அத்தகைய மனிதன் தான் இராமன்."

இனி, பாட்டைப் படியுங்கள்!

புறத்து நாம்ஒரு பொருள் இனிப்
புகலுவ தெவனோ?
அறத்தின் மூர்த்திவந் தவதரித்
தான்என்ப தல்லால்,
பிறத்து, யாவையும் காத்தவை
பின்னுறத் துடைக்கும்
திறத்து மூவரும் திருத்திய
திருத்தும் அத் திறலோன்.

மும்மூர்த்திகளின் படைப்புகளையும் திருத்தி அமைக்கத் தக்க சக்தி — மகாசக்தி, மனிதனிடம் பொதிந்து கிடக்கிறது என்ற கம்பனின் குறிப்பு உன்னி உன்னி ஓரத்தக்கது.

கம்பன் தனது மானிடத்தின் இரண்டு ஈரற்பைகளாக அறத்தையும் அன்பையும் கொள்கிறான். ஆகவே கம்பனின் இராமன் அறத்தின் மூர்த்தியாய் விளங்குவதுபோல் அன்பின் மூர்த்தியாகவும் காட்சி அளிக்கிறான்.

தண்டகாருண்யத்து முனிவர்கள் இராமனை அடைக்கலம் புகுகிறார்கள். அரக்கர்களின் இரக்கமற்ற தொல்லைகளிலிருந்து தங்களுக்குப் பாதுகாப்பு வேண்டுமென்று இராமனிடம் கனிந்து வேண்டுகின்றனர். இராமன் அஞ்சேல் என்று அபயம் அளிக்கிறான். அப்பொழுது அவன் அவர்களிடம் ஒரு உண்மையைக் கூறுகிறான். என்ன கூறுகிறான்?

தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்பவனே மனித னில் மாண்புடையவன். ஆவுக்காகவோ, அந்தணர்க்கா கவோ, எளியவர்க்காகவோ, யாருக்காகவோ ஒருவன் பிறர் நல — பொதுநல நாட்டத்தோடு, உயிரைத் தியாகம் செய்வ தில் வெற்றி பெறுவானுயின் அவன் தேவாதி தேவர்களா லும் கையெடுத்துக் கும்பிடும் தகுதியுடையவனுகி விடுகிருன்.

ஆவுக் காயினும் அந்தணர்க் காயினும்
யாவர்க் கேனும் எளியவர்க் காயினும்
சாவப் பெற்றவரே தகை வானுறை
தேவர்க் கும்தொழு தேவர்க ளாகுவர்.

(அகத்தியப் படலம்—21)

மேலும் அதே முனிவர்களிடம் 'அஞ்ச வேண்டா' மென்று தேறுதல் கூறும்பொழுது, இராமன் வாயிலாகக் கம்பன் 'அறம் வெல்லும்' என்ற சர்வ நிச்சயத் தன்மையைக் கூறும் பாணியைப் பாருங்கள்! சூரசங்காரனை சுப்ரமணி யக் கடவுளும் சங்கு சக்கரதாரியான மகா விஷ்ணுவும், திரி புரம் எரித்த சிவபெருமானும் அரக்கர்களுக்குத் துணை போவா ராயின், நான் அவர்களையும் வேரறுப்பேன் என்று உறுதி கூறுகிருன் இராமன். இதன் பொருள், பாவத்திற்குத் துணை போயின், மும்மூர்த்திகள் கூட அழிவர் என்று கூறி, மனித தருமத்தின் சர்வ வல்லமையைத் தூக்கி வைத்துப் புகழ்கிருன் கம்பன்.

சூரறுத்தவ னும்சுடர் நேமியும்
ஊரறுத்த ஒருவனும் ஓம்பினும்
ஆரறத்தி னுடன்றி நின்ருர் அவர்
வேரறுப்பென் வெருவன்மின் என்ருன்.

(அகத்தியப் படலம்—22)

## அழியினும் அடைக்கலம் தேடுவர்

விபீஷணன் இராமனிடம் அடைக்கலம் புக வருகிருன். அந்த விபீஷணனை ஏற்றுக் கொள்ளலாமா கூடாதா? என்று இராமன், மந்திராலோசனை சபை கூட்டித் தனது தளபதி

னிடம் கேட்கிருன். வானரர்களெல்லாம் எக்காரணத்தைக் கொண்டும் விபீஷணனை நம்மோடு சேர்த்துக் கொள்ளக் கூடா தென்கிருர்கள். சுக்ரீவனும் விபீஷணனை ஏற்றுக் கொள்ளும் யோசனையை அழுத்தம் திருத்தமாக மறுக்கிருன். தம்பி இலக்குவனும் கூட உக்ரமாக எதிர்க்கிருன். அந்தச் சபையில் அனுமன் மட்டுமே விபீஷணனை ஏற்றுக் கொள்வது சரி என்று யோசனை சொல்கிருன். ஆனல் அவனுடைய யோசனை அந்த சபையில் பலவீனமாகவே கேட்கிறது. சில வானர வீரர்கள், விபீஷணன் உளவு தெரிய வந்திருப்பான்; அவனை உடனே கொன்றுவிட வேண்டும் என்று கூட யோசனை சொல்கிருர்கள்.

இந்தச் சூழ்நிலையில் இராமன் மனிதத் தன்மையின் உன்னதமான உணர்ச்சியை வெளியிடுகிருன். கம்பனுடைய இராமன் கூறுகிருன்: "அடைக்கலம் என்று வருகிறவன், நமக்கு முன்பின் தெரியாது இன்று புதிதாக வருகிறவனுக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். எனது பரம விரோதியான இராவணனே அடைக்கலமாக வந்தால் அவனையும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். வந்து நம் மோடு சேர்ந்த பிறகு, நமக்குத் துரோகம் செய்கிருன், நமது உயிருக்கு உலை வைக்கிருன் என்றிருக்கட்டும். அப்பொழுதும் நமக்கு நஷ்டமில்லை. புகழே பெருகும்."

இதோ கம்பன் பாட்டு!

இன்று வந்தான் என்றுண்டோ?
　　எந்தையை யாயை முன்னைக்
கொன்று வந்தான் என்றுண்டோ?
　　புகலது கூறு கின்ருன்.
தொன்றுவந் தன்பு பேணும்
　　துணைவனும் அவனே! பின்னைப்
பின்றும் என்ருலும் நம்பால்
　　புகழன்றிப் பிறிது முண்டோ?

நீதியிலெல்லாம் நீதி இந்த மனித நீதிதான் என்று இராமன் மூலம் நமக்கு விளக்குகிருன் கம்பன்.

மற்ெறாரு கம்ப சித்திரத்தில், 'மானிடம்' சிறந்த முறையில் இராமன் வாயிலாக வெளிப்படுவதைப் பாருங்கள்!

## தம்மவர் குற்றத்தைத் துடைத்தான்

தசரதன் கைகேயிக்கு இரண்டு வரம் கொடுத்திருந்தான். அதனால் கைகேயி தருணம் வாய்த்ததும், ஒரு வரம், பரதன் நாடாளவும், ஒரு வரம், இராமன் காடாளவும் பெற்றாள். இராமன் காட்டுக்குச் சென்றான். பரதனுக்கு ஒன்றும் தெரியாது இதுபற்றி. பிரிவாற்றாமையால் கோபங்கொண்ட தசரதன், தான் வரங்கொடுத்ததை நோவாமல், கைகேயியை நொந்தான். கோபத்தால் சபித்தான். 'இனி நீ எனக்கு மனைவி அல்லள், உன் மகன் பரதன் எனக்கு மகன் அல்லன்' என்றான். பின்னர் இறந்தான்.

காட்டிலிருந்து பதினான்கு ஆண்டுகளுக்குப் பின் இராமன் நாட்டிற்கு மீண்டான். இராமனிடம் தேவ தூதர்கள் தசரதனை அழைத்து வந்தார்கள். தசரதன் இராமனைக் கண்டதும் அரவணைத்துக் கொண்டு, 'உனக்கு ஒரு வரம் கேள்' என்றான். தசரதன் தனது தவற்றை மறந்து கைகேயியை மனைவியல்லளென்றும், பரதனை மைந்தனல்லனென்றும் சபித்த குற்றத்தைத் துடைக்கக் கருதி இராமன், "கைகேயியும் பரதனும் எனக்கு அன்னையும் தம்பியும் ஆகும் வரம் தா", என்று கேட்டான். உலகத்து உயிர்களெல்லாம் இராமனை வாழ்த்தின.

இனிக் கம்பன் கவியைப் பாருங்கள்!

ஆயினும் உனக்கமைந்த தொன்று
உரையென அழகன்,
தீயள் என்றுநீ துறந்தஎன்
தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம்
தருகெனத் தாழ்ந்தான்
வாய்திறந்து எழுந்து ஆர்த்தன
உயிரெலாம் வழுத்தி.

தன்னைச் சேர்ந்தாரின் குற்றத்தைத் துடைப்பது, மனிதத் தன்மையின் எத்தனை சிறந்த கடமை உணர்ச்சி என்பதை உலகம் அறியும்படி இராமன் மூலமாகக் காட்டுகிருன் கம்பன். கைகேயியும் பரதனும், தனது தாயும் தம்பியும் ஆகும்படி வரங் கேட்டு, இராமன் தசரதன் முன் தலைவணங்கியதும் என்ன நடந்ததென்று கம்பன் படம் பிடித்துக் காட்டுகிருன்! பாருங் கள்! சகல ஜீவராசிகளும் எழுந்து நின்று, வாய் திறந்து, மிக ஆர்ப்பாட்டத்துடன் 'இராமன் வாழ்க வாழ்க' என்று கோஷித் தன என்கிருன் கம்பன். கம்பன் இராமனில் ஏற்றிக் காட்டும் மானிடம்தான் என்னே!

## இன்று போய்ப் போர்க்கு நாளை வா!

இறுதியாக ஒரு சித்திரம்:

முதல் நாள் இராமனுக்கும் இராவணனுக்கும் கடும் போர், ரத, கஜ, துரக, பதாதிகளோடு இராவணன் போராடி ஞன். அத்தனையும் துவம்சம் செய்தான் இராமன்; இராவணன் தன் தேரில் நின்று மட்டும் போராடினுன். அவன் தேரை ஒழித்துக் கட்டிஞன் இராமன்! இராவணன் தரையில் நின்று போராடிஞன். அவன் கைவில்லையும் முறித்தெறிந்தான் இராமன். இராவணன் வெறுங் கையோடு நின்ருன்.

பேராண்மையின் திருவுருவாகிய இராமன், தனது பரம வைரியான இராவணனைப் பார்த்து, "இன்று போய்ப் போர்க்கு நாளை தயாரிப்போடு வா" என்று பெருந்தகைமை கனிய வழி அனுப்புகிருன்.

கம்பன் தரும் இந்த நிகரற்ற நாடகக் காட்சியை அனு பவியுங்கள்!

ஆளையா! உனக்கமைந்தன மாருதம் அறைந்த
பூளையாயின கண்டனை; இன்றுபோய்ப் போர்க்கு
நாளைவாவென நல்கினன்; நாகிளங் கமுகின்
வாளைதாவுறு கோசலைநா டுடைவள்ளல்.

(முதற் போர்ப் படலம் 256)

'நாளைவா'' என்று சொல்லுமுன் இராமன். இராவண னிடம், ''வலியெலாம் கொண்டுநில்'' என்பதும், ''நேர் நின்று பொன்றுதி யெனினும் நல்லை'' என்பதும், ''பிழைப் பிணி உண்டென நயவேல்'' என்பதும் தருமத்தின் சர்வ நிச்சய வெற்றி எவ்வாறு பேசும் என்பதைக் காட்டுகிறது.

'நாளை வா' என்று சொல்லாமல் விடப்படுகிருனே இராவணன், அவன் யார்? எத்தகையவன்?

''முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்
தவமும்
முதல்வன் முன்னுள்
எக்கோடி யாராலும் வெலப்பாடாய் எனக்
கொடுத்த
வரமும் ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருகடந்த
புயவலியும்.........''

உடையவன் இராவணன்.

''தேவருக்கும் திசைகரிக்கும் சிவனுர்க்கும்
மயனுர்க்கும் செங்கண்மாற்கும்
ஏவருக்கும் வலியான்''

இராவணன்.

''என்னையே நோக்கி யான்இன் நெடும்பகை
தேடிக் கொண்டேன்''

என்று கொக்கரித்த தன்னகங்காரத்தின் தனிப்பெரும் சிகரம் இராவணன்.

இத்தகைய இராவணனை 'இன்று போய் நாளை வா' என்று சொல்கிருன் மகா மானிடனுகிய இராமன்.

ஹிட்லர் ஆயுதங்களிழந்து தனியாக வந்து, அகப்பட்டுக் கொண்டான் என்று வைத்துக் கொள்வோம். அவனைப் பார்த்து, ''ஹிட்லர் ஐயா, இன்று போய் நாளை வாருங்கள்''

என்று சொல்வார்களா? அப்படிச் சொன்னால், அதைக் கேட்டுச் சிரிக்க மாட்டார்களா? ஹிட்லர் இப்படி முற்ற முற்ற வலுக் குன்றி நின்றால் அப்பொழுதே, அங்கேயே அன்னே அவனை எமலோகம் அனுப்பிவிட்டுத்தானே மறுகாரியம் பார்ப்பார்கள்? அதைத்தானே மிகச் சிறந்த போர்த் தந்திரம் என்று கூறுவார்கள்?

கம்பன் காவியத்தில் இராமன் யாராலும் வெல்ல முடியாத வரம் பெற்ற 'இராவணேஸ்வரனை', மறத்தின் மகாமேருவை 'இன்று போய் நாளை வா' என்கிறானே, இத்தகைய பேராண்மைப் பாத்திரத்தை எந்தக் காவியத்திலேனும், சரித்திரத்திலேனும், பிரத்தியட்ச வாழ்விலேனும் உலகில் எங்கேனும், என்றேனும் கண்டதுண்டா?

"கம்பன் என்றொரு மானிடன்" என்று பாரதி கூறியது எத்துணை மெய்! கம்பன்—ஒரு மானிடன்—அவன் காவியம்—மானிட மகாகாவியம். ஐயமில்லை.

அன்பர்களே! கம்பன் காவியத்தில் மென்மேலும் மூங்கி எழுவோம். 'மானிடனை' அறிவோம், புரிவோம், தெளிவோம், அனுபவிப்போம்!

(1955-ம் ஆண்டில் காரைக்குடி : கம்பன் திருநாளில் பேசிய பேச்சு)

# பாரதியின் தத்துவ ஞானம்

## பாரதியும் வாழ்க்கைப் பார்வையும்

"உணவு, உடை, உறைவிடம், கல்வி, தொழில், உண்மை, அழகு, இன்பம்—இவை மனித வாழ்வின் முதல் பெருந் தேவைகள். மற்றவை எல்லாம் இரண்டாந்தரமான தேவைகள் அல்லது தேவையற்றவைகள்."

வேறு எது இருப்பினும் இல்லாவிடினும் மனிதன் வாழ முடியும். ஆனல் மேலே கூறிய எட்டுப் பொருள்களும் இல்லாவிட்டால் மனிதன் மனிதனுக வாழ முடியாது.

நேற்றும், இன்றும், நாளையும் வாழ்க்கைப் பெரும் தத்துவ ஞானம் (The great philosophy of life) இதுவே

பாரதி இலக்கியம் முழுவதையும் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தால் இந்தத் தத்துவஞானம் பலபட ஊடுருவிக் கிடப்பதைக் காணலாம்.

இசைக் கருவிகளில் வீணை ஈடு இணையற்றதல்லவா? ஆயிரம் நரம்புகளைக் கொண்ட யாழ்செய்து நுண்ணிய இசையின்பத்தை, விண்ணமுதம் கெடச் சுவைத்தவன் தமிழன் என்று சொல்லுகிருர்கள். இந்த வழி வழியில் வந்தவன் பாரதி.

வாழ்விலேயே சிறந்த மனித வாழ்வை எண்ணுகிருன். அதனைப் பொருத்தமாக உவமிக்க "நல்லதோர் வீணை" நினைவுக்கு வருகிறது அவனுக்கு. வீணை, அதிலும் "நல்லதோர் வீணை," சிந்திக்க வேண்டும். மனிதவாழ்வு, அதிலும் பெறற்கரிய மனிதவாழ்வு, சிந்திக்க வேண்டும்.

வீணை எதற்கு? ஒரு பயனுமின்றிக் குப்பை மேட்டில் தூக்கி எறிவதற்கா? அல்ல. பின் எதற்கு? வாசித்து உலகத்தை எல்லாம் இன்பக் கடல் ஆட்டுதற்கு; தானும் இன்பக் கடலாடுதற்கு. மனித வாழ்வு எதற்கு? வெந்ததைத் தின்று விதிவந்தால் சாவதற்கா? அல்ல. பின் எதற்கு? உலகத்தைப் பயனுள்ள வாழ்வு வாழச்செய்து, உலகம் முழுவதும் இன்பம் அடைவதில் தன்னுடைய இன்பத்தைக் காண்பதற்கு.

பாரதிக்கு முன்பிருந்த தமிழ்ச் சான்றோர்கள் மட்டுமல்ல. உலகச் சான்றோர்கள் எல்லோருடைய கண்ணோட்டத்தின் அடிச்சரடும் இதுதான். பாரதியின் வாழ்க்கைப் பார்வை அவர்களுடைய சீரிய கண்ணோட்டங்களையெல்லாம், காலத்திற்கு ஏற்ற மெருகு கொடுத்துப் பிரதிநிதிப்படுத்துகிறது.

இந்தப் பார்வையை பாரதி, சக்தியினிடம் வரங்கேட்கும் ஒரு பாடலில் மிக அழகாகக் காட்டுகிறான்!

"நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி சிவசக்தி!—எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்
வல்லமை தாராயோ?—இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?
சொல்லடி சிவசக்தி—நிலச்
சுமையென வாழ்த்திடப் புரிகுவையோ?"

சோற்றுக்குச் செலவும், பூமிக்குப் பாரமுமாக எனக்கு வாழ்வு வேண்டாம். மனித வர்க்கத்தின் விடுதலைக்கும், நல்வாழ்வுக்கும் பெரும்பணி புரிவதற்காகவே எனக்கு வாழ்வு வேண்டும்.

பாரதியின் வாழ்க்கைப் பெருநோக்கைப் பார்த்தீர்களா?

வேருரிடத்தில் சக்தியினிடம் வேருெரு வகையான வரம் கேட்கிருன். என்ன கேட்கிருன்?

"எண்ணும் காரியங்கள் எல்லாம்—வெற்றி
ஏறப்புரிந் தருளல் வேண்டும்—தொழில்
பண்ணப் பெருநிதியம் வேண்டும்—அதில்
பல்லோர் துணைபுரிதல் வேண்டும்—சுவை
நண்ணும் பாட்டிெெடு தாளம்—மிக
நன்ரு வுளத்தழுந்தல் வேண்டும்—பல
பண்ணிற் கோடிவகை யின்பம்—நான்
பாடத் திறனடைதல் வேண்டும்"

## பாரதி கேட்ட வரம்

இவ்வாறு வரம் கேட்கிருன். செயலுக்கு ஏற்ற உணர்வை மக்களிடம் தூண்ட, தனக்கு ஒப்பற்ற பாடல் திறமை அருள வேண்டும் எனக் கேட்கிருன்.

மேலும் கேட்கிருன்:

"கல்லை வயிரமணி யாக்கல்—செம்பைக்
கட்டித் தங்கமெனச் செய்தல்—வெறும்
புல்லை நெல்லெனப் புரிதல்—பன்றிப்
போத்தைச் சிங்கவே ருக்கல்—மண்ணை
வெல்லத் தினிப்புவரச் செய்தல்—என
விந்தை தோன்றிட இந்நாட்டை—நான்
தொல்லை தீர்த்துயர்வு கல்வி—வெற்றி
சூழும் வீரம் அறிவாண்மை
கூடுந் திரவியத்தின் குவைகள்—திறல்
கொள்ளுங் கோடிவகைத் தொழில்கள்—
இவை
நாடும் படிக்குவினை செய்து—இந்த
நாட்டோர் கீர்த்தியெங்கும் ஓங்கக்—கலி
சாடுந் திறன் எனக்குத் தருவாய்—"

எத்தகைய திறனெல்லாம் கேட்கிருன்? என்ன செய்யக் கேட்கிருன்? யாருக்காகக் கேட்கிருன்? என்ற கேள்விகளைக்

கிளப்பி, பாரதி வரம் கேட்பதைத் துருவினால்தான். அவனுடைய கண்ணோட்டத்தை நாம் கண்டுகொள்ள முடியும்.

"நாட்டோர் கீர்த்தியெங்கும் ஓங்கக்—கலி
சாடும் திறன்"

வேண்டுமென்று கேட்கிறான். சுவைத்துச் சுவைத்துப் பாருங்கள். அவனுடைய பெரிய பார்வை நமக்கு விளங்கும்.

இன்னும் மேலே போய், பாரதி சக்தியிடம் வரங்கேட்கிறான்:

"...... ...... ...... ...... ...... ...... ...... இனி
வையத் தலைமை எனக் கருள்வாய்"

என்று கேட்கிறான்.

விண்ணகத்தை மண்ணகத்தில் கொண்டு வரவேண்டும். எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும்—அதுதானே பாரதியின் பெரும் பார்வை?

இதை வேறொரு கோணத்திலிருந்து பாரதி அந்தம் சிந்த அழகு ஒழுகக் காட்டுவதைப் பாருங்கள்!

ஒரு நாள், பாரதி விழித்தெழுந்தானாம். தடதடவென்று சத்தம் கேட்டதாம். யார் ஓடிவருகிறார்கள் என்று கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தானாம். வேறு யாருமில்லை, சில தெய்வங்கள் அவனிடம் ஓடி வந்தனவாம்.

வந்த தெய்வங்கள் அவனுக்கு வரங் கொடுக்கவா வந்தன? அல்ல, அல்ல. அவன் எத்தனை வரங்கள் கேட்டிருக்கிறான். ஆயினும் வந்தவை அவனுக்கு வரங் கொடுக்க வரவில்லை. பின்?

பாரதியும் ஆச்சரியப்பட்டான். நாமும் ஆச்சரியப்படுகிறோம். அந்த தெய்வங்கள் பாரதியிடம் வரம் கேட்க, 'நீ முந்தி', 'நான் முந்தி' என்று போட்டிபோட்டுக் கொண்டு ஓடிவந்தனவாம். அவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வரம் கேட்டனவாம்.

இந்த நிகழ்ச்சியைப் பாரதி சொல்லும் பாணியையும், வரத்தின் தன்மையையும் மென்று மென்று ருசித்துப் பாருங்கள்!

"நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப்பா டென்றொரு தெய்வங் கூறுமே;
கூட்டிமானுடச் சாதியை ஒன்றெனக்
கொண்டு வையம் முழுதும் பயனுறப்
பாட்டி லேஅறம் காட்டெனும் ஓர்தெய்வம்;
பண்ணில் இன்பமும் கற்பனை விந்தையும்
ஊட்டி எங்கும் உவகை பெருகிட
ஓங்கும் இன்கவி ஓதெனும் வேறொன்றே"

"நாட்டு மக்கள் பிணியையும் வறுமையையும் நையப்பாடு! மானுடச் சாதியை, ஒன்றெனக் கூட்டி, வையமுழுதும் பயனுற அறங்காட்டு" என்றெல்லாம் தெய்வங்கள் வரங் கேட்டன என்கிறான். அதன் மூலம் ஒரு கவிஞனின் இலட்சியத்தைக் காட்டி, தனது வாழ்க்கைப் பெருநோக்கத்தைச் சித்திரித்துக் காட்டுகிறான்.

இங்கு, தெய்வங்களின் வாயில் வைத்து, உலக வாழ்வில் செம்மை நிறை வாழ்வு—நன்மை நிறை வாழ்வுதான் இலட்சிய வாழ்வு என்பதை அறுதியிட்டுக் காட்டுகிறான்.

மற்றோரிடத்தில் தனது குறிக்கோளை மூன்று கூறுகளாகப் பிரித்துக் காட்டுகிறான். காட்டி அந்த மூன்றையும் செய்தால், "நம் குடியை" (மனித வர்க்கத்தை) கணநாதன் வாழ்விப்பான் என்று தன் மனத்திற்குத்தானே அறிவுறுத்துகிறான்.

"நமக்குத் தொழில்கவிதை, நாட்டிற் குழைத்தல்,
இமைப் பொழுதும் சோரா திருத்தல்"

கவிதை ஆக்குவதும், நாட்டிற்கு உழைப்பதும், எப்பொழுதும் சோர்வு அடையாமல் இருப்பதும்தான் அந்த முத்தொழில்கள்.

தெய்வங்கள் பாரதியிடம் கேட்ட வரங்களையும், பாரதி மனத்தைச் செய்யும்படி ஏவும் மூன்று தொழில்களையும்

இணைத்துச் சிந்தித்துப் பார்த்தால் அவனுடைய வாழ்க்கைக் கண்ணோட்டம் நன்கு வெளிச்சமாகும்.

## பாரதியின் கிருதயுகம்

பாரதியின் வாழ்க்கைப் பார்வையில் ஒரு புரட்சி நிகழ்ச்சி ஒரு "யுகப் புரட்சி"யைக் காட்டுகிறது. "கலி" இடிபட்ட சுவர்போலே விழுகிறான். "கிருத யுகம்" எழுகிறது.

அவனுடைய "பொதுவுடைமைப் பார்வை"யில், "உல கத்துக்கொரு புதுமை" நடக்கிறது. "எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் விலை, எல்லோரும் ஓர் நிறை" என்ற சூழ்நிலை உருவாகிறது. அங்கு "எல்லோரும் மக்கள், எல்லோரும் மன்னர்"களாக வாழ்கிறார்கள்.

## பாரதியும் தத்துவ ஞானமும்

"நான் ஜாதி பேதத்திற்கு நண்பன் அல்லேன். இந்தியர்கள் எல்லாரும் இந்துக்கள், எல்லாரும் ஒரே ஜாதி என்ற சாதாரண இங்கிலீஷ் படிப்பாளிகள் கொள்கையை நான் அனுசரிக்கவில்லை. உலகத்து மனிதர்கள் எல்லாரும் ஒரே ஜாதி. "வஸுதைவ குடும்பம்" என்ற பர்த்ருஹரியின் கொள்கையைத் தழுவியுள்ளேன். மனித ஜாதியும் மற்ற ஜந்து சமூகங்களும் ஒரே குடும்பம் என்ற டார்வின் என்ற ஆங்கில விஞ்ஞானியின் கருத்தைப் பின்பற்றுகிறேன். எல்லா உயிர்களும் கடவுளுடைய அம்சம் என்ற பகவத் கீதையின் பரமோபதேசத்தைக் கடைப்பிடித்து நிற்கிறேன்."

பாரதி 1921 மார்ச் 15-ம் தேதி எழுதிய ஒரு கட்டுரையின் ஒரு பகுதி இது. மறைவதற்கு ஆறு மாதங் களுக்கு முன்னால் வெளியிட்ட கருத்து இது. எனவே மேற் படிக்கருத்துக்கள், பாரதியின் தத்துவ முதிர்ச்சியில் விளைந்த கருத்துக்கள் என்பது உறுதி.

## உலகத்து மக்களெல்லாம் ஒரே ஜாதி

பாரதியின் கருத்து பழைய உண்மையும் புதிய உண்மையும் இரண்டறக் கலந்து இருபதாம் நூற்ருண்டின் மெருகும் ஏறி, தமிழகத்தில் வெடித்துக் கிளம்பிய கருத்து. பகவத்கீதை — பர்த்ருஹரி — டார்வின்—பாரதி—பல்வேறு காலத்து உரமும் நீரும் ஊட்டி வளர்த்துள்ள கொள்கை—உலகத்து மக்களெல்லாம் ஒரே சாதி; உலகத்து உயிர்களெல்லாம் ஒரே குடும்பம்; உலகத்து உயிர்களெல்லாம் கடவுளின் அம்சம் என்ற கொள்கை.

பின்னும் ஐந்து மாதங்களுக்கு அப்பால் இந்தத் தத்துவத்தை மேலும் வளர்த்து வேருெரு விதமாக வெளியிடுகிருன். அது இது:

"எல்லாப் பொருள்களையும் ஒரே பொருளாகக் காண்பவனுக்கு மருட்சி இல்லை; துயரமில்லை. எல்லாம் ஒரே பொருள் என்று கண்டவன் எதனிடத்தும் கூச்சமோ, வெறுப்போ, அச்சமோ கொள்ள மாட்டான். அவன் எல்லாப் பொருள்களிடத்தும் அன்பும், ஆதரவும், மகிழ்ச்சியும் பக்தியும் செலுத்துவான். எந்தப் பொருளிலிருந்தும் மன நிறைவு பெறுகிறவன், எப்பொழுதும் நிறைவோடிருப்பான். இங்ஙனம் மாருத இன்ப நிலையே முக்திநிலை என்றும் அமர பதம் என்றும் கூறப்படுவது. இதனை மனிதன் பயிற்சியாலும் நம்பிக்கையாலும் இந்த உலகத்திலே பேச எய்திவிட முடியும். இது தான் வேத ரகசியம்."

இந்தக் கருத்தை 1921 ஆகஸ்டு 25-ம் தேதி எழுதிய "ஸ்ரீ ரவீந்திர திக்விஜயம்" என்ற கட்டுரையில் "காளிதாசன்" என்ற புனை பெயரில் பாரதி குறிப்பிடுகிருன். இதை ரவீந்திரர் இந்தியாவின் பிரதிநிதியாக உலகத்திற்கு அருளிய உபதேசம் என்று குறிப்பிடுகிருன். இதுதான் பாரத நாட்டுக்குப் பூலோககுரு என்ற பெருமையை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறதென்று குறிப்பிடுகிருன்.

"வியனுல கனைத்தையும் அமுதென நுகரும்
தேவ வாழ்வை"

இங்குத் தத்துவக் கனியாகப் பழுக்கவைத்து அருளுகிருன்.

இந்தத் தத்துவத்தை பாரதி நடைமுறைக் கொள்கையாக்க விரும்புகிருன். அதன் பொருட்டு உலக முழுவதிலும் ஒரு கண்ணேட்டம் செலுத்துகிருன். அதே ஓட்டத்தில் ஒரு வட்டத்தைத் தமிழகத்திலும் செலுத்துகிருன். சில முடிவுகளுக்கு வருகிருன்.

1. எல்லா மக்களும் ஏற்றத்தாழ்வு பாராட்டாமல், சரிநிகர் சமானமாக வாழவேண்டும்.

2. எல்லா மக்களும் உலக இன்பம் முழுவதையும் சம உரிமையோடும் சமவாய்ப்போடும் அனுபவிக்க வேண்டும். நமது பழம் பெரும் பண்பாட்டையும், மனித வர்க்கத்தின் புத்தம்புது லட்சியங்களையும் இரண்டறக் கலந்து, மேற்கூறிய முடிவுகளுக்கு வருகிருன்.

முடிவுகளை நடைமுறையாக்குவது எப்படி? நோயின் அளவுக்குத் தக்கபடியும் ஆளின் அளவுக்குத் தக்கபடியும் மருந்து கொடுக்க வேண்டுமென்று உணர்கிருன்.

எதார்த்தச் சூழ்நிலையை உள்நுழைந்து கணக்கில் எடுக்கிருன். மக்கள், சாதிமத வாழ்விலும், தத்துவஞானக் கோட்பாடுகளிலும் அழுந்திக் கிடப்பதைப் பார்க்கிருன். புதிய வாழ்வு மலர வேண்டுமானுல், ஜனயுகம் தோன்ற வேண்டுமானுல், புதுமை வாய்ந்த ஒரு சமய-தத்துவஞானக் கண்ணேட்டத்தை உருவாக்கிப் பொது மக்களுக்குக் கொடுக்க வேண்டியது மிகமிகத் தேவை என்று அவனுக்குப்படுகிறது.

எண்ணுகிற பொழுதும், எழுதுகிறபொழுதும், பேசுகிற பொழுதும், பாடுகிற பொழுதும், தான் தமிழன் என்பதையும் தமிழ்நாட்டில் வாழ்கிறவன் என்பதையும் பாரதி ஒரு நாளும் மறந்ததில்லை.

முதன் முதலில் அவன் கடவுள் தத்துவத்தை எப்படி உருவாக்குகிருன் என்று பார்ப்போம்.

இதை, பாரதி எப்படிக் காண்கிருன்? எப்படிக் காட்டுகிருன்? என்பதற்கு மிக மிகச் சிறந்த எடுத்துக்காட்டு ஒன்று இதோ தருகிறேன்.

முன்னுரை : உலகப் பெரியார்கள் சிலரின் வசனங்களைக் கோத்தெழுதுகிறேன். தமிழ் நாட்டுப் பொதுமக்களே! உன்னிப்பாகக் கற்றுத் தெளிவடையுங்கள்!

தெலுங்கு ஞானி, வேமண்ணு கவி :

"கோயில்களை ஏன் கட்டுகிறீர்? தெய்வம் உள்ளுக்குள்ளே இருக்கிறது."

சுவாமி விவேகானந்தர் : "அறிவில் பரமாத்மா மறைந்து நிற்கிறது செய்கை, அன்பு, யோகம், ஞானம் இவற்றினுல் அதை அடைந்து, விடுதலை பெறு."

அமெரிக்க ஞானி, எமர்சன் :

"ஒவ்வொருவனும் தன்னுள்ளேயிருக்கும் திருக்கோயிலின் கதவை அடைத்து வைத்துக்கொண்டு, மற்றவன் தெய்வத்தையும், மற்றவனுக்கு வேருெருவன் சொன்ன தெய்வத்தையும் பற்றிப் பொய்க்கதை சொல்கிருன்."

சீன ஞானி, சென்-ஸே-சுங் : "பழைய மதம் உண்மை என்று சொல்லிவிட முடியாது, மனித வர்க்கம் நாளேற நாளேற உண்மையை நன்ருகத் தெரிந்துகொள்கிறது. பாட்டன் நம்பியதை நாம் நம்பவேண்டுமென்பது, குழந்தைச் சட்டையைப் பெரியவன் போட்டுக்கொள்ள வேண்டுமென்பது போலாகும்."

மற்ருெரு அமெரிக்க ஞானி, தோரோ : "உலகம் பழைமையில் நம்பிக்கை வைக்கிறது; புதிய ஞானிகள் கண்டவற்றைப் பகைக்கிறது! என்ன ஆச்சரியம்!"

இராமகிருஷ்ண பரமஹம்சர் : "சித்திகள் செய்யும் மனிதர் இருக்கும் இடத்திற்குப் போகவேண்டாம். அவர்கள் உண்மை நெறியினின்றும் தவறிவிட்டார்கள்."

ருஷ்ய ஞானி, லியோ டால்ஸ்டாய் : "மதக் கொள்கைகளில் பயன் இல்லாதது. சடமாவது, புறவடிவமாவது, தெளிவில்லாதது, நிச்சயமில்லாதது—இவைகளை அச்சமில்லாமல் தள்ளிவிட வேண்டும். சாரததை மாத்திரம் கொள்ள வேண்டும். சாரத்தை எத்தனைக்கெத்தனை சுத்தம் செய்கிறோமோ, அத்தனைக்கத்தனை உலகத்தின் உண்மை விதி நமக்குத் தென்படும்."

## எது தெய்வம்?

பற்பல நாட்டு ஞானிகளின் கருத்துக்களைக் கோவைப் படுத்திக் காட்டி, மதத்தைப் பற்றியும், கடவுளைப் பற்றியும் நாம் எவ்வெவற்றைக் கொள்ள வேண்டும் என்று அப் பெரியார்கள் வாயிலாகவே, பாரதி நமக்கு எடுத்துக் காட்டுகிறான். பின்னர் "எது தெய்வம்?" என்ற வினவைக் கிளப்பி சில ஞானிகளைக் கொண்டு விடையளிக்க வைக்கிறான்.

"எது தெய்வம்?"

"உடல், தோற்றம், வடிவம், ஜடம் இவை இல்லாதது, நமது புலன்களுக்கு எட்டாதது, "தெய்வம்."

— எகிப்திய ஞானி, ஹெர்மஸ்

"எல்லாப் பொருள்களிலும் திரைக்குள் மறைந்து நிற்பது போல் நிற்கும் ஒளியே தெய்வம்."

— இராமகிருஷ்ண பரமஹம்சர்.

"எட்டுத் திசையும் பதினறு கோணமும்
எங்கும் ஒன்ருய் முட்டித் ததும்பி
முளைத்தோங்கும் சோதி" — பட்டினத்தார்.

"உண்மைப் பொருள் ஒன்று. அதனைப் புலவர்கள் பலவாறு சொல்கிருர்கள்." — ரிக்வேதம்

"திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய் அவை தோறும்
உடல்மிசை உயிரெனக் கரந்துளன்"

— நம்மாழ்வார்

"தெய்வம் எது? உலகத்தின் உயிர்."

— ஹெர்மஸ்

முடிவுரை :

எல்லா மதங்களும் உண்மை; ஆனால் முழு உண்மையல்ல. மதப்பிரிவு காட்டி, மக்களைப் பிரிக்கக்கூடாது, மத விஷயங்களிலும், லௌகீக விஷயங்கள் போல் ஒப்பு, உடன்பிறப்பு, விடுதலை மூன்றும் பாராட்டப்பட வேண்டும்."

இதுவரைக் கூறியவற்றை பாரதி கூறுகிற இடம் தெரியுமா உங்களுக்கு?

'கட்டுரை' என்ற தொகுதியில் தத்துவம் என்ற பகுதியில், 'உண்மை' என்ற தலைப்பில் 'ரத்னக் களஞ்சிய' மாக பாரதி மேற்படி கருத்துக்களைத் தொகுத்துத் தந்திருக்கிறான்.

எப்படிப் பழைய தத்துவங்களைப் பக்குவமாகக் கழிக்க வைக்கிறான். அதுவும், மனித வர்க்கம் கையெடுத்து வணங்கும் பற்பல கால ஞானிகளைக் கொண்டு கடவுள் தத்துவத்தை, மதக் கோட்பாடுகளை ஒட்டிப் புதுப்பிக்கிறான்? சாரம் நிறைந்த, உயிர்த் துடிப்புக் குன்றாத பழைய தத்துவங்களுக்கு எப்படிக் காலத்திற்கேற்ற கோலம் புனைகிறான் என்பதில்தான் பாரதியின் தத்துவ தரிசனப் பெருமை பொதிந்து கிடக்கிறது.

## காலத்தோடு வளர்ந்தான்

இந்தத் தத்துவ தரிசனம் இருந்ததால்தான் பாரதியிடம் வாழ்வைப்பற்றிய முழுப் பார்வை சுடர்விட்டு ஒளிர்ந்தது.

கால வளர்ச்சியோடு பாரதியும் வளர்ந்தான். இந்த நூற்ருண்டின் சமுதாய, பொருளாதார, தத்துவஞான, கலை இலக்கிய வளர்ச்சியோடு அவனுடைய வளர்ச்சியும் இணைந்து சென்றது என்பது குறிப்பிடத்தக்கது.

சமய சமரசத்தை இராமலிங்க சுவாமிகளுக்குப் பின்னுல் பாரதிக்கு நிகராக யாரும் பேசவும் இல்லை; வளர்த்துப் பேசவும் இல்லை.

'பொருள் ஒன்று, வடிவங்கள் பல' என்ற கருத்தைப் பற்பல கவிதைகள் மூலம் பற்பல வகையாக விளக்கிக் காட்டுவதை இனி நாம் பார்ப்போம். வடிவங்களோடு மோதாமல் பொருளை வற்புறுத்தினுல், கடவுள் சண்டை, மதச் சண்டைகளை ஒழிக்க முடியும்; மத அடிப்படையிலுள்ள ஏற்றத் தாழ்வுகளைத் தவிர்க்க முடியும்; உலக வாழ்வையும், புதிய லட்சியங்களையும் பொது மக்கள் நிதானமாகச் சிந்திக்கும்படி செய்ய முடியும் என்பது பாரதியின் ஆழ்ந்த அபிப்பிராயம். மேலும் மறுஉலக—மேலுலக வாழ்வில் இருக்கும் மானசீகப் பிடிப்பைக் கழற்றி, இந்த உலக வாழ்வில் உறுதியான பிடிமானம் ஏற்படச் செய்ய முடியும் என்பதும் பாரதியின் உறுதியான கருத்து.

## பாரதியும் மதமும் - கடவுளும்

பல கடவுள் வணக்கம் நிறைந்த சூழ்நிலையைப் பாரதி காண்கிருன். கடவுள் சண்டையைத் தவிர்க்க விரும்புகிருன். கடவுள் இல்லை யென்ற கொள்கை, அவன் கொள்கையல்ல. கடவுள் வடிவங்களை மறுப்பதும் பயன் தரும் வழியென்று அவனுக்குப் படவில்லை. எனவே "பல வடிவம்—பொருள் ஒன்று" என்று பக்குவமாக, பல பட, நயம்படக் கூறுகிருன்.

இதற்குச் சிற்சில எடுத்துக் காட்டுக்களைக் காண்போம்:

விநாயகரைப் போற்றித் தொழுகிருன். எப்படி? என்ன பாணியில்?

"இறைவி இறைவன் இரண்டும்ஒன் ருகித்
தாயாய்த் தந்தையாய்ச் சக்தியும் சிவனுமாய்
உள்ளொளி யாகி உலகெலாந் திகழும்
பரம்பொரு ளேயோ! பரம்பொரு ளேயோ
ஆதி மூலமே! அனைத்தையும் காக்கும்
தேவ! தேவா! சிவனே! கண்ணு!
வேலா! சாத்தா! விநாயகா! மாடா!
இருளா! சூரியா! இந்துவே! சக்தியே!
வாணீ! காளீ! மாமக ளேயோ!
ஆணுய்ப் பெண்ணுய் அலியாய், உள்ளது
யாதுமாய் விளங்கும் இயற்கைத் தெய்வமே!"

இந்த அடிகள் பாரதியின் "விநாயகர் நான்மணி மாலை யில் விநாயகர் தோத்திரமாக வருகின்றன. இந்த அடிகளில், சக்தி, சிவன், பரம்பொருள், ஆதிமூலம், தேவன், கண்ணன், வேலன், சாத்தன், விநாயகர், மாடன், இருளன், சூரியன், சந்திரன், வாணி, காளி, மாமகள் என்று எத்தனையோ வடிவங் களைக் குறிப்பிடுகிருன். விரோத - குரோதமின்றிக் குறிப்பிடு கிருன். ஏற்றத் தாழ்வின்றிக் குறிப்பிடுகின்ருன்.

அதே பொழுதில், இவற்றிலெல்லாம் உள்ளது எது என்று கூறுகிருன்? "உள்ளது, யாதுமாய் விளங்கும் இயற்கைத் தெய்வம்" என்கிருன். "உலகமெலாம் திகழும் பரம்பொருள் ஒன்று" என்கிருன்.

இனி "பாரதி அறுபத்தாறில்" பாரதி கடவுளைப் பற்றி வேறொரு விதமாகக் கூறும் கருத்தைக் கேளுங்கள்:

"சுத்த அறி வேசிவமென் றுரைத்தார் மேலோர்
சுத்தமண்ணும் சிவமென்றே உரைக்கும் வேதம்
வித்தகனும் குருசிவமென் றுரைத்தார் மேலோர்
வித்தையிலாப் புலையனும்அஃதென்னும்வேதம்;
பித்தரே அனைத்துயிருங் கடவுளென்று
பேசுவது மெய்யானுல், பெண்டிர் என்றும்

நித்தநும தருவினிலே குழந்தை யென்றும்
நிற்பனவும் தெய்வமன்றே நிகழ்த்து வீரே?
உயிர்களெல்லாம் தெய்வமன்றிப் பிறவொன்றில்லை;
ஊர்வனவும் பறப்பனவும் நேரே தெய்வம்;
பயிலுமுயிர் வகைமட்டும் அன்றி யிங்குப்
பார்க்கின்ற பொருளெல்லாம் தெய்வம் கண்டீர்;
வெயில் அளிக்கும் இரவி, மதி, விண்மீன், மேகம்
மேலும் இங்குப் பலபலவாம் தோற்றங் கொண்ட
இயலுகின்ற ஜடப்பொருள்கள் அனைத்தும் தெய்வம்;
எழுதுகோல் தெய்வம்; இந்த எழுத்தும் தெய்வம்.''

பாரதி ''தெய்வத்தை'' எப்படியெப்படி உருவகப்படுத்திக் காட்டுகிறான் தெரியுமா? ''சர்வம் பிரம்ம மயம் ஜகத்'' என்ற வேதக் கருத்தின் சாரத்தை எடுத்து, நாம் வாழும் வாழ்வை, நமது குழந்தை குட்டிகளைப் பேரன்போடு மதிக்கத் தக்க விதத்தில் நமக்கு ஒரு கண்ணோட்டம் ஏற்படும்படி வடிவாக்கிக் காட்டுகிறான்.

''ஊருக்கு நல்லது'' சொல்கிற 'முரசுப் பாட்டிலும்' தெய்வத்தைப் பற்றிப் பேசுகிறான்.

''தெய்வம் பலபல சொல்லிப்—பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர்''

என்கிறான். எதைக்கொண்டு, ''பல சொல்லிப் பகை வளர்ப்பதைச்'' சாடுகிறான்?

''உய்வ தனைத்திலும் ஒன்றாய்—எங்கும்
ஓர் பொருள் ஆனது தெய்வம்''

''ஓர் பொருள்'' என்ற கொள்கையைக் கொண்டே சாடுகிறான். இதிலிருந்து, வாழ, வாழ்வில் முன்னேற ஒரு சமரச நீதியும் போதிக்கிறான்.

''தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தம்
திக்கை வணங்கும் துருக்கர்,

கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
 கும்பிடும் ஏசு மதத்தார்
யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்
 யாவினும் நின்றிடும் தெய்வம்
பாருக்குள்ளே தெய்வம் ஒன்று—இதில்
 பற்பல சண்டைகள் வேண்டாம்''

கடவுள் சண்டையையும் மதச் சண்டையையும் தவிர்க்க வேண்டுமென்பதில் பாரதி காட்டும் மனித உணர்ச்சியும் முயற்சியும் நாம் நன்கு சிந்திக்கத் தக்கவை.

இதுபோல், ''அபேதானந்தா'' புகழ் மாலையிலும் ''ஒரு பொருள்'' கருத்தை வலியுறுத்தியும், கடவுள் சண்டையிடல் இழிவு என்று அறிவுறுத்தியும் பாரதி பாடுகிறான்:

''ஒன்றே மெய்ப்பொருள் ஆகும்; உயிர்களெல்லாம்
 அதன் வடிவாம் ஒருங்காலை: என்தேவன் உன் தேவன் என்
 றுலகர் பகைப்பதெலாம் இழிவாம் என்று
 நன்றேயிங்கு அறிவுறுத்தும் பரமகுரு''

என்று அபேதானந்தாவைப் போற்றி வணங்குகிறான்.

கடவுள் சண்டையை விலக்கி மனிதன் மனிதனாக வாழ பாரதி வகுத்துக் காட்டும் வழி இது.

மேலும் பல்வேறு மதங்களின் மோதுதலைத் தவிர்க்கவும் கடவுளைக் காணவும் வழி சொல்கிறான்.

''ஈரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார்
எப்போதும் அருளைமனத் திசைத்துக் கொள்வாய்
வீரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார்
எப்போதும் வீரமிக்க வினைகள் செய்வாய்''

ஈரமும் வீரமும் வேண்டும், அருள் மனமும் வீரமிக்க வினைகளும்தான் சிவனை (கடவுளை)க் காட்டும் என்பது பாரதியின் ஒரு வழி.

"பூமியிலே, கண்டம் ஐந்து, மதங்கள் கோடி!
புத்தமதம், சமணமதம், பார்ஸி மார்க்கம்
சாமியென ஏசுமதம் போற்றும் மார்க்கம்
சநாதனமாம் இந்துமதம், இஸ்லாம், யூதம்
நாமம்உயர் சீனத்து "தாவு" மார்க்கம்
நல்ல "கண்பூசி" மதம் முதலாப் பார்மேல்
யாமறிந்த மதங்கள் பல உளவாம் அன்றே;
யாவினுக்கும் உட்புதைந்த கருத்திங் கொன்றே"

இவ்வாறு பேதமுற்று வாதாடுகிற பற்பல மதங்களை எடுத்துக் காட்டுகிறான். இவை யாவற்றினும் உட்பொருள் ஒன்றேயென்றும் எடுத்துக் கூறுகிறான். ஆகவே, என்ன செய்ய வேண்டும்?

"பூமியிலே வழங்கி வரும் மதத்துக்கெல்லாம்
பொருளினை நாம் இங்கெடுத்துப் புகலக்கேளாய்;
சாமி நீ; சாமி நீ; கடவுள் நீயே;
தத்வமஸி; தத்வமஸி; நீயே அஃதாம்;"

இதை நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்கிறான்.

"கடவுள் நாம் என்றும், அருள் மனமும், வீரமிக்க வினைகளும் நம்மிடம் மலர வேண்டும்" என்றும் பாரதி நமக்கு வழி காட்டுகிறான்.

## பாரதியும் பிரபஞ்சமும்

பாரதி இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்த, இந்தப் பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்ட ஒரு பொருள் உண்டென்பதை ஒப்புக் கொள்ளவில்லை. இந்தப் பிரபஞ்சத்திற்கு அப்பால் ஒரு உலகம் உண்டென்பதையும் ஒப்புக் கொள்ளவில்லை.

இதர பெரியார்கள் அல்லது சிறந்த தத்துவஞானிகள் இயற்கைக்கு அதீதமான ஒரு பொருளை (Supernatural-being) ஒப்புக் கொள்கிறார்களா இல்லையா என்பது வேறு விஷயம். அவர்களுக்கு பாரதியின் கொள்கை உடன்பாடா, முரண்பாடா என்பதும் வேறு விஷயம்.

பாரதி இலக்கியம் முழுவதையும் பரக்க ஆராய்ந்தால் பாரதி, இயற்கைக்கு (Nature) அல்லது இந்தப் பிரபஞ்சத்திற்கு (Universe) அப்பால் ஒரு பொருள் இல்லை என்கிறான் என்பதைத் தெளிவுபடுத்தப் பற்பல எடுத்துக் காட்டுகள் கொடுக்க முடியும்.

பாரதி, தான் பாடிய "உயிர்பெற்ற தமிழர்" என்ற பாட்டின் இறுதியில் "பரம்பொருளுக்கு" விளக்கம் கொடுக்கிறான். அதனை இங்கு நாம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். பாட்டின் அந்தப் பகுதி பின் வருமாறு:—

"எல்லையில்லாத உலகில்—இருந்(து)
எல்லையில்காலம் இயங்கிடும் தோற்றம்
எல்லையிலாதன ஆகும்—இவை
யாவையுமாயிவற்றுள் உயிராகி
எல்லையில்லாப் பொருள் ஒன்று—தான்
இயல்பறிவாகி இருப்பதுண்டென்றே,
சொல்லுவார் உண்மை தெளிந்தார்—இதைத்
தூவெளியென்று தொழுவர் பெரியோர்
நீயும் அதனுடைத் தோற்றம்—இந்த
நீலநிறம் கொண்ட வானமும் ஆங்கே
ஓயுதல் இன்றிச் சூழலும்—ஒளி
ஓங்கு பல்கோடிக் கதிர்களும் அஃதே,
சக்திகள் யாவும் அதுவே—பல்
சலனம் இறத்தல் பிறத்தலும் அஃதே
நித்தியம் ஆம்இவ் உலகில்—கடல்
நீரில் சிறுதுளி போன்றதிப் பூமி."

இந்த அடிகளை ஒரு தடவைக்குப் பத்துத் தடவை படித்துப் படித்துப் பொருள் உணர வேண்டும். பாரதியின் சிந்தனை ஓட்டத்தில் "பரம்பொருளை"ப் பற்றிய கருத்துவீச்சு எப்படி விழுகிறதென்பதை அப்பொழுதான் ஒருவாறு காண முடியும்

அந்த மாமேதையின் ஆண்மையும் அகண்டாகாரமும் கொண்ட சிந்தனைத் திரையில், 'எல்லையில்லாத உலகத்தின்

காட்சி விழுகிறது. அந்தக் காட்சியில் அது, எல்லையில் காலம், எல்லையில்லாதனவாக இயங்கிடும் தோற்றம் விழுகிறது. பாரதி 'எல்லாம் இந்த உலகம்தான்' என்கிறான்.

## இவ்வுலகம் நித்தியம்

அதோடு மட்டுமா? இந்த உலகத்தை யாரும் படைக்க வில்லை. இது அழியும் தன்மைத்தன்று. இது என்றும் உள்ளது என்று கண்டு காட்டுகிறான்.

"நித்தியமாம் இவ்வுலகம்" என்று நேர்ந்த தெளிவில் சொல்கிறான். இங்கு 'உலகம்' என்று அவன் குறிப்பிடுவது பிரபஞ்சத்தை. இந்தப் பிரபஞ்சம் என்றும் உள்ளது என்று உறுதி கூறுகிறான். இதில், "கடல் நீரில் சிறுதுளி போலும் இப்பூமி" என்று பாடி, அதாவது நாம் வாழும் பூவுலகு, பிர பஞ்சம் என்கிற கடலில் ஒரு சிறு துளி மாத்திரமே என்று கூறி, பிரபஞ்சத்தின் பெருமையை அளந்து காட்டுகிறான்.

இந்தப் பிரபஞ்சத்தை மேற்கூறியபடி, "எல்லையில் லாத, நித்ய உலகமாக" அளந்து காட்டிய பிறகு, இதற்கப் பால் வேறொரு உலகம் உண்டு என்பதை அவன் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? 'அப்பால்' என்ற சொல்லுக்கே அவன் காட்சியில் இடமிருக்க முடியாதல்லவா?

எனவே "கைலாசம்", "வைகுந்தம்", "பரமண்டலம்" முதலிய பிரபஞ்சத்திற்கு அப்பாலுள்ளதாகக் கூறப்படும் எந்த உலகத்தையும் அவன் ஒப்புக்கொள்ளவில்லை.

"செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திடலாமென்றே எண்ணியிருப்பார்
பித்தமனிதர் அவர்சொலும் சாத்திரம்
பேயுறை ஆமென்று ஊதேடா சங்கம்"

என்று கூறி மேற்படி கற்பனை உலகங்களுக்குச் செல்லும் பாதையின் கதவுகளை அடைக்கிறான். இத்தகைய உலகங்களை உண்மை என நம்புகிறவர்களின் தரத்தையும், இருக்கவேண் டிய இடத்தையும் சுட்டிக் காட்டுகிறான்.

## இங்கேயே சொர்க்கம்

ஆயினும், பாரதியின் மனப்பான்மை எதிர்மறைத் தன்மை கொண்டதல்ல. மனிதாபிமானத்தோடும், அருள் உணர்ச்சியோடும், சான்றோர்கள் பலகாலும் கற்பனை செய்து வந்துள்ள "சொர்க்கம்" போன்ற இன்ப உலகங்களை பாரதி ஒரேயடியாக நிராகரிக்கிறான் இல்லை. பின் என்ன செய்கிறான்? மானசீகமாக நிற்கிற அவை எதார்த்த வாழ்வுக்கு இறங்கி வந்து வேரூன்ற வேண்டுமென்று விரும்புகிறான்.

"மண் பயனுற வேண்டும்
வானகம் இங்குத் தென்பட வேண்டும்"

என்று பாடி, கனவை நனவாக்க விரும்புகிறான்.

இதிலிருந்து பாரதி வேறொன்று காட்டுகிறான்.

"கவலை துறந்திங்கு வாழ்வதே வீடு
செத்த பிறகல்ல 'மோட்சம்' "

இந்த வாழ்வில் கவலையில்லாமல் வாழ்வதே மோட்சம் (வீடு) என்று மோட்சத்திற்குப் புதிய விளக்கம் கொடுக்கிறான். இந்தக் கருத்தை "விநாயகர் நான்மணி மாலையில்" "கவலைப் படுதலே கருநாகு, அம்மா! கவலையற்றிருத்தலே முக்தி" என்று தெளிவாகக் கூறுகிறான்.

இம்மை மறுமை என்ற பேச்சுக்கு வெகு நயமாகப் பதிலிறுக்கிறான். ஆத்மா கூடுவிட்டுக் கூடு பாயும் என்ற கொள்கை, எண்ணத்தை இயக்கும் வரையில், இந்த உலக வாழ்வைப் பற்றிய பிடிமானத்தையும் இந்த வாழ்வில் இன்றே, இன்னே கடமைகளை நிறைவேற்ற வேண்டும் என்ற உறுதிப் பாட்டினையும் காலைவாரிவிடும் பலவீனம்தான் பெருகும் என்பதை உணர்கிறான்.

எனவே பாரதி இந்தப் 'பிறப்பையே' வற்புறுத்துகிறான். அமுலாகவேண்டிய நன்மைகளுக்கெல்லாம், நாள், கிழமை, நட்சத்திரம் "இத்தரை மீதினில் இப்பொழுதே" என்கிறான்.

"ஜயமுண்டு பயமில்லை மனமே—இந்த
ஜன்மத்திலே விடுதலை யுண்டு; நிலையுண்டு"

என்ற பாரதியின் வாக்கு எத்துணை மந்திர சக்திவாய்ந்ததாக ஒலிக்கிறது? எவ்வளவு புதிய ஒளி பாய்ச்சுவதாயிருக்கிறது?

## கிருத யுகம்

மனித வர்க்கத்தின் பொற்காலத்தைக் கிருதயுகம் என்கிறார்கள் — மத பாஷையில். எல்லாம் நன்மையாகத் திகழும் காலம்—எல்லோரும் நிறைவுடையோராய் வாழும் காலம் கிருத யுகமாம். கலியுகத்திற்கு நேர் எதிர்மாறானது. கிருதயுகத்தை சத்ய யுகமென்றும், அமரயுகம் என்றும் அழைக்கிறார்கள்.

மத வாழ்வில் அடிபட்ட-அடிபடுகின்ற 'கிருதயுகம்' என்ற சொல்லை அப்படியே எடுத்துக் கொள்கிறான். அந்தச் சொல்லினுள் பழைமையாகவே புதைந்து கிடந்த சிறந்த அம்சங்களையும் புதிய வாழ்வின் சீரிய நோக்கங்களையும் விரவி அடைத்து பாரதி அதை நமக்கு அருளுகிறான்.

பாரதி இலக்கியம் முழுவதும் 'கலியை'ச் சாடுகிறது. 'கிருத யுகத்தை'த் தாங்கித் தழுவுகிறது.

"..........அன்பினையே சூழ்க! துயர்கள்
தொலைந்திடுக! தொலையா இன்பம்
விளைந்திடுக! வீழ்க கலியின்
வலியெல்லாம்! கிருதயுகந்தான்
மேவுகவே"

'விநாயகர் நான்மணி மாலை'யில் இந்த அடிகளைப் படித்தால், பாரதி காணும் கலியுகமும், கிருதயுகமும் நமக்குப் பளிச்சென்று வெளிச்சம் ஆகிறது.

இதையொட்டி, பாரதி என்ன கூறுகிறான் தெரியுமா?

"பொய்க்கும் கலியை நான் கொன்று
பூலோ கத்தார் கண்முன்னே
மொய்க்கும் கிருத யுகத்தினையே
கொணர்வேன், தெய்வ விதி இஃதே!"

என்கிருன். கிருதயுகத்தை இன்றைய உலகத்தார் காண— அனுபவிக்கக் கொண்டு வருவது. "தெய்வ விதி" — இயற்கைச் சட்டம், வரலாற்று நியதி என்கிருன்.

"வீழ்த்தல்பெறத் தருமம்எலாம் மறமனைத்தும்
 கிளைத்துவர, மேலோர் தம்மைத்
தாழ்த்ததமர் முன்னேங்க நிலைபுரண்டு
 பாதகமே ததும்பி நிற்கும்
பாழ்த்தகலி யுகஞ்சென்று மற்ருெருயுகம்
 அருகில் வரும் பான்மை தோன்றக்
காழ்த்த மன வீரமுடன் யுகாந்தரத்தின்
 நிலையினிது காட்டி நின்ருன்!"

"பூபேந்திர விஜயம்" என்ற பாட்டில், சுவாமி விவேகானந்தரின் தம்பியான பூபேந்திரரின் தேசபக்தியையும் தீர்க்க தரிசனத்தையும் போற்றிப் புகழுகிற பொழுது, மேற்கூறிய அடிகளைப் பாடுகிருன். கலியுகம், கிருதயுகங்களின் தன்மை - தரம், செலவு - வரவை, நன்ருக எடுத்துக் காட்டுகிருன்.

பாரதியின் தீர்க்கதரிசனம் இருந்தவாறு என்னே!

அவன் காலத்தில் நிகழ்ந்த உலகைக் கலக்கிய ஒரு சம்பவத்தில் அவன் 'கலியின்' வீழ்ச்சியையும் "கிருதயுகத்தின்" எழுச்சியையும் காண்கிருன்.

ரஷ்யாவில் நிகழ்ந்த "ஜார்" வீழ்ச்சியை "யுகப்புரட்சி" யாகப் பார்க்கிருன். அந்தப் புரட்சியைப் பற்றிப் பாடிய பாட்டின் இறுதியில் என்ன பாடுகிருன்?

"இடிபட்ட சுவர்போல கலிவிழுந்தான்
 கிருதயுகம் எழுக!"

என்று பாடுகிருன்.

பாரதி கையாளுகிற "கலியுகம்", "கிருதயுகம்" என்ற சொற்ருெடர்களின் புதிய உள்ளடக்கத்தை இங்கு நம்மால் நன்ருகப் பார்க்க முடிகிறது.

## அமர நிலை

வையத்துள் மனிதன் வாழ வேண்டியபடி வாழ்வானுனால் "வானுறையும் தெய்வத்தின் வாழ்வை" அவன் வாழமுடியும் என்கிருன் தமிழ்ப் பேராசானுகிய வள்ளுவப் பெருந்தகை. வள்ளுவனின் வழி வழி வாரிசாகிய பாரதியும், தன் படையல் களில், பல்வேறு இடங்களில் பல்வேறு வகையாக, "அமர நிலை"யை முத்திரையடிக்கிருன்.

கிருதயுகம் அமரயுகம். மனிதன் அமர வாழ்வு வாழ்கிற யுகம் கிருதயுகம். உலகில் கிருதயுக உதயத்தை வேண்டி நின்ற பாரதி, அந்த யுகத்திற்குரிய அமர வாழ்வை, மனிதன் அடைய வேண்டும் என்பதையும் வேண்டி நின்ருன்.

"இங்கே அமரர் சங்கம் தோன்றும்
மங்கும் தீமை பொங்கும் நலமே"

என்று "கண்ணன் திருவடி" என்ற பாட்டில் பாடுகிருன். "அமரர் சங்கம்" அதாவது "தேவர்கள் சமுதாயம்" அதாவது "மனிதன் அமர நிலையில் வாழும் சமூக வாழ்வு" உலகில் மலரும் என்று தீர்க்கதரிசனத்துடன் பாடுகிருன்.

"நல்ல குணங்களே நம்மிடை அமரர்
பதங்களாம் கண்டீர்!"

என்று "விநாயகர் நான்மணி மாலை"யில் அமர நிலைக்கு விளக்கம் தந்து, தன் கருத்தைத் தெளிவுபடுத்துகிருன்.

"குணமதிற் பலவாம், கூறக் கேளீர்!
உட்செவி திறக்கும்; அகக்கண் ஒளிதரும்;
அக்கினி தோன்றும்; ஆண்மை வலியுறும்;
.....................................
அச்சம் தீரும்; அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி ஓங்கும்;
அமரத்தன்மை எய்தவும் இங்கு நாம் பெறலாம்"

என்று வேருேரிடத்தில் பாடுகிருன். மனிதனின், உயர் நிலை

வாழ்வுப் பண்புகளை இங்கு "அமரத் தன்மை" யாக எடுத்துக் காட்டுகிறான்.

இவ்வுலகில் மனிதர் அமரர் சிறப்புக் காண வேண்டுமா? பாரதி வழிகாட்டுகிறான். தமிழன் கண்ட அமுதமயமான உண்மைகளைத் தெள்ளிய தமிழில் நாம் பருகவேண்டும் என்கிறான்.

"தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்—
இங்கு
அமரர் சிறப்புக் கண்டார்"

"தமிழ்" என்ற மிகச் சிறந்த பாடலை, மேற்கூறிய அடியோடு முடிக்கிறான் பாரதி.

## பாரதியும் அறிவியலும்

"உலகம் இன்பக் கேணி. இதை மனித உடல் தாங்கித் திரியும் ஆணும் பெண்ணும் தேவைக்குத் தருந்தபடி அனுபவிக்க வேண்டும். மக்கள், சமவாய்ப்பும் சம உரிமையும் பெற்ற சகோதர சகோதரிகளாக வாழ வேண்டும்.

இந்தப் பேருண்மையை இரண்டு வழிகளால் உணர்த்த வேண்டும். ஒன்று அறிவைத் தொட்டு உணர்த்தவேண்டும். மற்றொன்று உணர்ச்சியைத் தொட்டு உணர்த்த வேண்டும்

மூளையைத் தொட்டுச் சொல்வதை 'வேதம்' என்கிறான் பாரதி.

"ஒன்று பரம்பொருள் நாம் அதன் மக்கள்
உலகு இன்பக்கேணி என்றே—மிக
நன்று பல்வேதம் வரைந்தகை
பாரத நாயகி தன் திருக் கை"

என்று "பாரதமாதா"வைப் பற்றி, பாரதி பாடும்பொழுது, 'வேதம்' பற்றிய தன் கருத்தை நுட்ப திட்பமாக வெளியிடுகிறான்.

உலகம் இன்பக் கேணியாக விளங்க வேண்டுமானால், மக்கள் வாழ்வு ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் திளைக்க

வேண்டும். சமத்துவ—சகோதரத்துவ—சுதந்திரம், சதையும் மூச்சும் பெற்று நித்திய நடைமுறை வாழ்வில் உலவ வேண்டும்.

நாம் எல்லாம் 'ஒரு பொருளால்' ஆக்கப்பட்டவர்கள்— 'பரம்பொருள் ஒன்று நாம் அதன் மக்கள்' — என்ற உணர்ச்சி மேலோங்க மேலோங்கத்தான், உலகம் இன்பக் கேணியாக விளங்கும்.

இந்த உண்மையைக் கூறுவதே வேதம். பலபல கோணங்களிலிருந்து, பலபல நிலையில் நின்று, பலபல பாணியில் அறிவைத் தொடுபவைகள் யாவும் வேதங்கள் பாரதிக்கு,

இதயத்தை ஆனந்தக் கூத்தாட வைப்பது, நரம்பை முறுக்கேற்றி விடுவது, ஒளிவிளக்காக வழி காட்டுவது இலக்கியம் என்கிறான்.

"தீஞ்சொற் கவிதையஞ் சோலை—தனில்
தெய்வீக நன்மணம் வீசும்
தேஞ்சொரி மாமலர் சூடி—மதுத்
தேக்கி நடிப்பாள் எம் அன்னை"

என்று "வெறிகொண்ட தாய்" என்ற பாடலில் ஒரு அடி பாடுகிறான் பாரதி. சிறந்த இலக்கியம், அது கவிதையோ, காப்பியமோ, கதை - கட்டுரையோ, உணர்ச்சியை என்ன செய்யும் என்பதை இங்குக் கோடிட்டுக் காட்டுகிறான்.

தீஞ்சொற்களும் தெய்வீக நன்மணமும் கவிதையஞ் சோலையை, இலக்கியப் பூங்காவை, அணிபெறச் செய்ய வேண்டும் என்கிறான். வடிவமும் உள்ளுறையும் (Boom & Content) சொல்லழகும் கருத்தழகும் ஈடுஜோடாக இணைந்து நிற்க வேண்டும் என்கிறான். வடிவில் குறைவற்ற தாஜ்மகாலைப் போல், அந்த இலக்கியம் இதய வீணையை அற்புதமாக இயக்கி, இன்பக்கடல் ஆட்டுவிக்கும் என்கிறான்.

## வேத - சாத்திரங்கள்

பாரதி பழைய வேதங்களையே வேதம், வேதம் என்று கூறுகிறான் என்று, இன்றும் தப்பாகக் கருதப்படுகிறது.

'வேதம் புதுமை செய்' என்று அவன் வருங்கால வாழ்வுக்குப் 'புதிய ஆத்திசூடி' பாடியிருப்பதே போதும், அவன் 'வேதம்' என்று கூறுவதும் சாதாரணமாக 'வேதம்' என்று கூறுவதும் ஒன்றல்ல என்று புரிந்து கொள்வதற்கு.

அதோடு, "வருகின்ற பாரதத்தை வாழ்த்துகின்ற" பாடலில்,

"மெய்ம்மை கொண்டநூலையே அன்போடு
வேதம் என்று போற்றுவாய் வா வா வா"

என்று அழைப்பதில் அவன் 'வேதம்' என்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதையும் சிந்திக்க வேண்டும்.

"பாஞ்சாலி சபதத்தில்" கலைமகளைப் படம் பிடிக்கிறான். அதில், "வேதத் திருவிழியாள்" என்று பாடுகிறான். 'கலைமகளின் கண், 'வேதம்' சிந்தனை விருந்தல்லவா?

"கண்ணன் பாட்டில்", 'கண்ணன் - என் தந்தை என்ற பகுதியில்,

"வேதங்கள் கோத்து வைத்தான்—அந்த
வேதங்கள் மனிதர்தம் மொழியில் இல்லை;
வேதங்கள் என்று புவியோர்—சொல்லும்
வெறுங்கதைத் திரளில்அவ் வேதம் இல்லை;
வேதங்கள் என்றவற் றுள்ளே—அவன்
வேதத்திற் சிலசில கலந்ததுண்டு;
வேதங்கள் அன்றி ஒன்றில்லை—இந்த
மேதினி மாந்தர்சொல்லும் வார்த்தைகள் எல்லாம்"

இந்த அடிகளைப் படித்தால் பாரதி சொல்லும் வேதங்கள், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று சாதாரணமாகச் சொல்லப்படுகிற நான்கு வேதங்கள் அல்ல என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கும்.

விரிந்த பரந்த இந்தப் பிரபஞ்சம் முழுமையையும் அமுதமாக நுகரும் வாழ்வுதான் 'வேத வாழ்வு' என்று வேறொரு இடத்தில், பாரதி குறிப்பிடுவதும் சிந்திக்கத் தக்கது.

"உயிர் பெற்ற தமிழர்" பாட்டில் 'வேதம்' என்று தான் அர்த்தப் படுத்துவதைத் தெள்ளத் தெளிவாகச் சொல்கிருன்:

"உண்மையின் பேர் தெய்வம் என்போம்—அன்றி
ஓதிடும்தெய்வங்கள் பொய்யெனக் கண்டோம்
உண்மைகள் வேதங்கள் என்போம்—பிறிது
உள்ள மறைகள் கதையெனக் கண்டோம்"

என்று பாடுகிருன்.

ஆகவே, பாரதி 'வேதம்' என்று சொல்வதை, பழைய நான்கு வேதங்கள் என்று பொருள் கொள்வதோ, அவ்வாறு பொருள் கொண்டு, பாரதியைப் பிற்போக்காளன் என்று கூறுவதோ தவறு. பாரதி இலக்கியம் முழுவதிலும் ஒட்டு மொத்தமாகக் கண்ணெறிந்து, அவன் கூறும் வேதத்தின் புதுக் கருத்தைத் தேர்ந்து தெளிதல் வேண்டும்.

பாரதி பழைய வேதத்தில் மூழ்கிவிடவில்லை. ஆனால் சாரத்தை எடுக்கிருன், புதிய வேதம் செய்கிருன். அது வாழ் வுக்கு வழிகாட்டும் வேதம்.

"பல்லாயிரம் வேதம் அறிவு ஒன்று", "வேடம் பல் கோடி ஓர் உண்மைக்குள் வேதம் புகன்றிடும்", "கவலை துறந் திங்கு வாழ்வதே வீடு என்று காட்டும் மறைகள் எல்லாம்" என்றும், "வேதம் என்றும் வாழ்க" என்றும் அவன் பாடி யிருப்பவைகள், வேதத்தைப் பற்றிய பாரதியின் கருத்தை யறிய, மிகமிகச் சிந்திக்க உதவும்.

## சாத்திரங்கள்

'சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்" என்கிருர் நாவுக் கரசர். "சாத்திரச் சந்தடிகளிலே" என்கிருர் இராமலிங்க வள்ளல்.

பாரதி 'சாத்திரம்' பற்றி என்ன சொல்கிருன்?

"கண்ணன் — என் தாய்" என்ற பாட்டில்,

"சாத்திரம் கோடி வைத்தான்—அவை
தம்மினும் உயர்ந்ததோர் ஞானம் வைத்தான்"

என்று பாடுகிறான்.

சாத்திரத்தை விட அறிவு — பகுத்தறிவுதான் பெரிது. சாத்திரத்தை அறிவு பயன்படுத்திக் கொள்ளவேண்டும். சாத்திரம், அறிவைக் கட்டுப்படுத்த அல்லது தடைப்படுத்தக் கூடவே கூடாது, இது பாரதியின் கருத்து

"சாத்திரங்களை"ப் பற்றி பாரதியின் இன்னொரு கருத்தைக் கேளுங்கள்.

"சாத்திரங்கள் பல தேடினேன்—அங்கு
சங்கையில் லாதன சங்கையாம்—பழங்
கோத்திரங்கள் சொல்லும் மூடர்தம்—பொய்மைக்
கூடையில் உண்மை கிடைக்குமோ?"

என்று "கண்ணன் — என் சற்குரு" என்ற பாட்டில் பாடுகிறான். சாத்திரங்கள் குழப்படிக் குட்டைகள் என்றும் அவற்றைப் படித்தால் சந்தேகம் இல்லாதன சந்தேகம் ஆகும் என்றும் அவை மூடர்களின் பொய்மைப் பொருவிளங்காய்கள் நிறைந்த கூடைகளென்றும் கூறுகிறான்.

இன்னும் கேளுங்கள் :

"சூத்திரனுக்கொரு நீதி—தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொரு நீதி;
சாத்திரம் சொல்லிடுமாயின்—அது
சாத்திரம் அன்று சதியென்று கண்டோம்"

இவ்வாறு, 'உயிர்பெற்ற தமிழர்" பாட்டில் பாடி, நாம் சாத்திரத்தை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகிறான்.

## புராணங்கள் - ஸ்மிருதிகள்

புராணங்களைப் பற்றியும் ஸ்மிருதிகளைப் பற்றியும் பாரதி சில பல வரையறுப்புகள் காட்டுகிறான்.

அனுமன் கதை, வீமன் கதை, அகத்தியன் கதை ஆகிய புராண இதிகாசக் கதைகளெல்லாம் புளுகுணிக் கதைகள், புராணங்கள் ஒன்றையொன்று பொய் என்று பழிக்கும். ஆனால் அவற்றைப் படைத்தவர்கள், நல்ல கவிதைகளையும் படைத்திருக்கிறார்கள். இவ்வாறு கூறிவிட்டு, பாரதி தனது மதிப்பீட்டைக் கூறுகிறான்

''கவிதை மிக நல்ல தேனும்—அக்
கதைகள் பொய்யென்று தெளிவுறக் கண்டோம்;
புவிதனில் வாழ்நெறி காட்டி—நன்மை
போதிக்கும் கட்டுக் கதைகள் அவைதாம்''

கட்டுக் கதைகள் மூலம் ''வாழ வழி'' போதிக்கின்றன என்கிறான். வாழும் வழிதான் பாரதியின் கவலை. எனவே ''நன்மை போதிக்கின்றன'' என்கிறான்.

ஸ்மிருதிகளை பாரதி, ''மாறியாறிப் பயிலும் இயல்பின'' என்கிறான். எனவே, அவைகளைப் பேணுகிறவர்களும் இல்லை என்கிறான்.

பாரதி காலத்தையும் நூல்களையும் இணைத்துச் சொல்லும் கருத்து, நமது நெஞ்சில் என்றும் நின்று நிலவத் தக்கது.

''காலத்திற்கேற்ற வகைகள்—அவ்வக்
காலத்திற்கேற்ற ஒழுக்கமும் நூலும்
ஞால முழுமைக்கும் ஒன்றாய்—எந்த
நாளும் நிலைத்திடும் நூல் ஒன்றும் இல்லை''

'புத்துயிர் பெற்ற புதிய தமிழர்' பாரதி உருவில் நின்று இவ்வாறு பாடுகிறான். இந்தக் கருத்தில் விஞ்ஞானப் பார்வை ஒளிவிட்டுக் கமகமப்பதை, நவீனக் கண்படைத்த யாரும் எளிதில் காண முடியும்.

# பாரதியும் இலக்கியமும்

"பாட்டுக்கொரு புலவன் பாரதி" என்பது கவிமணியின் கணிப்பு. நவீனக் கண்ணோட்டம் படைத்த தமிழ் அறிஞர்கள், தமிழ்க் கலைஞர்களுக்கெல்லாம், இந்தக் கணிப்பில் இரண்டு கருத்து இதுவரை இருந்தது கிடையாது.

பாரதி, ஒரு தமிழனாக இருந்து, உலகத்தின், பாரதத்தின், தமிழகத்தின் புரட்சிகரமான புதிய சக்தியைப் பிரதிநிதிப் படுத்தினான். ஆகவே, பழைய முறைகளில் அழுந்தி, "அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுந்தம்" என்று வாழும் தமிழ்ப் புலவர்கள் பாரதியைச் சரியாக அறிய முடியாமல் இருந்தார்கள்; இன்னும் இருக்கிறார்கள்.

புதிய இளைய நாகரிகத்தின் கலைப் போக்கையும் கருத்துப் போக்கையும் பழைய சிறந்த இலக்கிய அம்சங்களுடன் சுவையுறக் கலந்து பாரதி, தமிழை நேர் நிகரற்ற விதத்தில், வழியில் வளர்த்தான்.

தமிழ்க் கவிதையின் நறுமணமற்று, செய்யுள் பாடுவதை செப்பிடுவித்தை போன்று செய்து, ஏட்டுக் கற்பனையில் தொங்கி, சத்தும் தற்காலப் பண்புமற்ற பாடல்களை எழுதி எழுதித் தள்ளிக் கொண்டிருந்த மெய்ப்புலமையற்ற தமிழ்ப் புலவர்கள் மலிந்திருந்த காலத்தில் பாரதி தோன்றினான். உண்மைக் கவிதை ஒளியைத் தமிழகமெங்கும் பரப்பினான்.

தற்கால இலக்கியங்களில் நிரம்பிய புலமைபெற்ற எனது நண்பர் ஒருவர், "ஒரு மகாகவியை அளக்க நமது ஆராய்ச்சியில் இரண்டு கூறுகள் முதலிடம் பெறவேண்டும்" என்கிறார்.

1. புதிய கற்பனை முறைகளையும், கவிதையில் புதிய நடை — உடைகளையும், காலத்திற்கேற்ற கருத்து லட்சியங்களையும் தனது படையலில் இன்றியமையாதனவாகக் கொண்டு வந்திருக்கிறானா என்று பார்க்க வேண்டும்.

2. தன் காலசக்திகளால் ஒரு கவி உருவான போதிலும் தன் காலத்திற்கு அதீதமான லட்சியங்களைப் படைக்கும் ஆற்றல் பெற்றவனுயிருக்கிருனு என்று பார்க்கவேண்டும்.

இந்த இரண்டு வரையறைகளையும் அளவைகளாகக் கொண்டு அளந்து பார்த்தால், பாரதியை ஒரு மகாகவி என்றே மதிப்பிடவேண்டும். நிற்க,

பாரதியின் இலக்கியத்தைப் பற்றிய நிர்ணயிப்பு என்ன? சகலகலாவல்லியான கலைமகளின் முழுவடிவழகை ஓரிடத்தில் வருணிக்கிருன். "பாஞ்சாலி சபதத்தில்" சரஸ்வதி வணக்கத்தில், பின்வருமாறு கலைமகளைப் பற்றிக் கூறுகிருன் :

"வேதத் திருவிழி யாள்—அதில்
மிக்கபல் லுரையெனும் கருமையிட் டாள்.
சீதக் கதிர்மதியே—நுதல்,
சிந்தனையே குழல் ஒன்றுடையாள்.
வாதத் தருக்கம் எனும்—செவி,
வாய்ந்தநற் றுணிவுஎனும் தோடணிந் தாள்.
போதமென் நாசியி னுள்—நலம்
பொங்குபல் சாத்திர வாயுடை யாள்,
கற்பனைத் தேனித ழாள்,—சுவைக்
காவிய மெனுமணிக் கொங்கையி னுள்,
சிற்ப முதற்கலை கள்பல—பல
தேமலர்க் கரமெனத் திகழ்ந்திருப் பாள்,
சொற்படு நயம் அறிவார்—இசை
தோய்ந்திடத் தொகுப்பதின் சுவையறி வார்
விற்பனத் தமிழ்ப்புல வோர்—அந்த
மேலவர் நாவெறும் மலர்ப்பதத் தாள்"

இந்த நீண்ட அடிகளை ஒருதரம் ஊன்றிப் படியுங்கள்!

வேதம் கலைமகளின் கண்ணுா்; உரைகள் கண்ணுக் கிடும் மையாம்; தண்ணிய அறிவு, நெற்றியாம்; சிந்தனை கூந்தலாம்; தருக்கவாதம் செவியாம்; துணிவு, செவித் தோடாம்; உணர்வு நாசியாம்; சாத்திரம் வாயாம்; கற்பனை

இதழாம்; காவியங்கள் கொங்கைகளாம்; கலைகள் கரங்களாம்; புலவர்களின் நா அவள் பாதங்களாம்.

இங்கு, பழைய புலவர்களை அவர்கள் பாணியிலேயே பாரதி வென்று விட்டான் என்பதைப் பார்க்கிறோம். இலக்கியத்தைப் பற்றிய ஒரு முழுமையான பார்வையை பாரதி நமக்குக் காட்டும் அருமையே அருமை.

இந்த இலக்கியப் பண்புகளோடு, புதிய சேர்மானங்களையும், பேராற்றலுடன் சேர்த்தருளுகிறான் பாரதி.

## பாரதியின் காவியம்

பாரதியின் கவிதைகளை ஒரு முறைப்படுத்தி, ஒரு பாக்குக் கடிக்கிற நேரம் அலசிப் பார்ப்போம்.

அவற்றை; தேசீயப் பாடல்கள், தோத்திர — வேதாந்தப் பாடல்கள், தனிப் பாடல்கள், கற்பனைச் சித்திரங்கள், காவியங்கள் என்று முறைப்படுத்திக் கொள்ளலாம்.

## தேசீயப் பாடல்கள்

பாரதி இலக்கியத்தில் தேசீயப் பாடல்களுக்குத் தனி இடம் உண்டு. இந்தப் பாடல்களைப் போன்று, தெள்ளிய நடையில் தீங்கவிச்சுவையில் புதுமையும், வளமையும், பெருமையும் கொண்டு பொருளும் இசையும் மலரும் மணமும் போல் ஒளிரும் பாடல்கள் தமிழ் இலக்கியத்திலேயே வேறு இல்லை என்று சொல்லலாம்.

பழம் பெருமையில் பூரிப்பும், தற்கால நிலைமைக்கு நெஞ்சு உருகல், விடுதலைப் பேரார்வம், உயர்ச்சியில் நம்பிக்கை, களிப்பு, வீராவேசம் இவை தேசீயப் பாடல் தொகுப்பில், ஆற்றுப் பெருக்காய் ஓடுவதைக் காணலாம்.

தமிழ்ப் பெருமக்களின் கலை வளத்தின் சீர் - சிறப்புக்களையும், வரலாற்று மாண்பையும், ஒரே படத்தில் நேர் நோக்

காகப் பார்த்து இன்பப் பெருக்கு அடைய, "செந்தமிழ் நாடு" என்ற பாரதியின் அருமருந்தன்ன பாட்டைத் தவிர தமிழ் மொழியில் வேறு பாட்டு இல்லை.

"எந்தையும் தாயும்", "மன்னும் இமயமலை", "பாருக்குள்ளே நல்ல நாடு", "பாரத தேசம்", "பாரத மாதா திருப்பள்ளி எழுச்சி" போன்ற பாடல்களும் இன்ன பிறவும், பழம் பெருமையையும், தற்கால நிலைமையையும் எண்ணி நாட்டன்பு கரை புரண்டோடும்படி செய்ய இனிய ஓசைப் பெருக்கும் கவிதை ரசமும் பொங்கும்படி பாடப்பட்டுள்ள நிகரற்ற பாடல்களாகும்.

இந்தப் பாடல்கள் கவிதா ரீதியிலும், இலக்கிய ரீதியிலும் அதிகச் சிறப்புடையன அல்ல என்றும், சுதந்தர பிற்காலத்தில் இவைகளுக்குத் தேவையில்லை, எனவே மங்கி விடும் என்றும் சிலர் நினைக்கிறார்கள். இந்த நினைப்பு ஆழ்ந்த ஆராய்ச்சியின் விளைவாக இருக்க முடியாது. தற்கால வாழ்க்கையின் அம்சங்கள், சுகதுக்கங்கள், சமுதாய லட்சியங்கள், மக்கள் போராட்டங்கள் — சாதனைகள் ஆகியவற்றைக் கவிதைக்குப் பொருளாகக் கையாள்வது சிலருக்குப் பிடிக்கவில்லை.

ஆனால் ஒன்று மட்டும் கூற முடியும். கடவுளின் மீது காதலும் கன்னியர் மீது காதலும், பாட்டுக்கு ஏற்ற பொருளாயிருந்து, அற்புதமான கவிதைகளைப் படைக்க முடியுமானால், நாட்டன்பும் இதர உலகியல் வாழ்வின் குறிக்கோள்களும், கவிதைக்கு உகந்த பொருளாக ஏன் இருக்க முடியாது? கட்டாயம் இருக்க முடியும். முடியும் என்பதை பாரதி நன்றாக நிரூபித்திருக்கிறான்.

பாட்டு, இசைச் சுவையுடனும், நடை அழகுடனும், எளிய சொற்களுடனும், கற்பனை நயத்துடனும், கனிந்த மன உணர்ச்சியை எதிரொலிக்க வேண்டும். அவ்வாறு எதிரொலிக்குமானால், அது, நமது மனத்தை என்றென்றும் வசீகரிக்கக் கூடிய ஒரு சிருஷ்டி ஆகிவிடும்.

பாரதியின் பாடல்களில் சில பல, நடையிலும், ஒலியிலும், திருவாசகம், திவ்வியப் பிரபந்தங்களைப் பின்பற்றுகின்றன. "பாரதமாதா திருப்பள்ளி எழுச்சி" இதற்கு ஓர் நல்ல எடுத்துக் காட்டு.

"புள்ளினம் ஆர்த்தன; ஆர்த்தன முரசம்"

என்று வரும் பாரதியின் அடிகளையும்,

"கூவின பூங்குயில்; கூவின கோழி"

என்று வரும் மாணிக்கவாசகரின் அடிகள்,

"புலம்பின புட்களும் பூம்பொழில்களின் வாய்"

என்று வரும் தொண்டரடிப்பொடி யாழ்வாரின் அடிகளையும் ஒப்புநோக்கிப் பார்த்தால் இந்த உண்மை புலனாகும். பாரதியின் பாட்டு இசைச் சுவையிலும், இலக்கியச் சுவையிலும் குறைந்திருக்கிறதா? இல்லை. மாருக, அதன் எளிமைக்கு அதிகக் கவர்ச்சி இருப்பதாகவே தோன்றுகிறது.

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந் நாடே"

என்று வரும் அடிகளையுடைய பாட்டிலும்,

"மாரத வீரர் மலிந்த நன்னாடு"

என் வரும் அடிகளையுடைய பாட்டிலும், இதுபோன்ற பிற பாட்டுக்களிலும், கவிதைச் சுவையும் பண்பும் இல்லையா? இல்லை என்று யாராவது சொல்லத் துணிந்தால், அன்னாருடைய கலைப் பயிற்சியிலும் ரசிகத் தன்மையிலும் ஊனம் இருக்கிறது என்று தீர்மானித்து விடலாம். பாரதியின் பாடல்கள், அவற்றின் எளிமையினால், சர்வ சாதாரணமானவைபோல் தோன்றலாம். ஆனால் அவை பொருள் செறிவு உடையவை; எத்தனை ஆயிரம் உணர்ச்சி அலைகளையும், கற்பனை ஓவியங்களையும் நம் உள்ளத்தில் எழுப்புகின்றன!

(1958-ம் ஆண்டில் பாரதி தினத்தை யொட்டி 'ஜனசக்தி'யில் எழுதிய ஏழு கட்டுரைகள்)

# பாஞ்சாலி சபதம் புதுமை நயங்கள்

பாரதி அருளிய மூன்று பெரிய கவிதை நூற்கள் கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகியன. இவற்றில் குறிப்பிட்ட வகையில் 'பாஞ்சாலி சபதம்' தனிச் சிறப்புடையது. இது புதிய இலக்கியத்திற்கு எடுத்துக் காட்டான புதிய காவிய நூலாகும்.

பாஞ்சாலி சபதம் இரண்டு பாகங்களைக் கொண்டது; எழுபத்து மூன்று தலைப்புகளையுடையது: முந்நூற்று எட்டுப் பாடல்களையுடையது. இந்த நூலின் அளவு 69 பக்கங்களே ஆயினும், குயில் பாட்டு (19 பக்கம்) கண்ணன் பாட்டு (30 பக்கம்) இரண்டையும் ஒன்றுக்கிப் பார்த்தால்கூட இது பெரிது.

பாரதம் பழம் பெரும் கதை. உலகப் பெரும் இதிகாசங் களில் அல்லது காப்பியங்களில் வியாசர் பாரதமும் ஒன்று. மகாபாரதம், பெருந்தேவனார் பாரதம், வில்லிபாரதம், நல் லாப்பிள்ளை பாரதம் என்பன போன்று பலமுறை பலரால் மொழி பெயர்க்கப்பட்டும், பிறவாறும் தமிழில் அமைக்கப் பட்டிருக்கிறது. இவற்றுள் வில்லிபுத்தூர் ஆழ்வாரால் இயற்றப்பட்ட பாரதம்தான் இன்று வரையில் செல்வாக் குடன் வரவேற்கப்பட்டு வருகிறது.

பாரதியின் பாஞ்சாலி சபதமும் பாரதக் கதைதான்; ஆனல் முழுக் கதை அல்ல. பாஞ்சாலி சபதம் பூணுகிறவரையி லுள்ள ஒரு பகுதிக் கதையைத்தான் பாரதி பாஞ்சாலி சபதம் என்ற பெயரால் நமக்கு வடித்துத் தந்திருக்கின்ருன். கதை பழையதுதான், வில்லி பாரதத்திலுள்ள சூதுப் போர்ச்

சருக்கத்தில் காணப்படும் கதைதான். ஆனால் பாஞ்சாலி சபதம் என்ற பெயர் புதிது; பெயர் மட்டுமல்ல, வியாசர் பாரதத்தைப் படித்தாலும் சரி அல்லது தமிழ் பாரதங்களைப் படித்தாலும் சரி பாரதி நூலில் கதை மட்டுமல்ல புதிது "சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொற் புதிது" என்பதை நாம் காணமுடியும்.

## ஆசிரியர் கருத்து

பாஞ்சாலி சபதத்தில் முதற் பாகம் 1912-ஆம் ஆண்டில் பாண்டிச்சேரியிலிருந்து வெளிவந்தது. அதன் முகவுரையில் பாரதி பின்வருமாறு கூறுகிறான் :

"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினுடைய காவியம் ஒன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகிறான். ஓரிரண்டு வருடத்து நூற்பழக்கமுள்ள தமிழ் மக்களெல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன், காவியத்துக்குள்ள நயங்கள் குறைவு படாமலும் நடத்தல் வேண்டும்."

"காரியம் மிகப் பெரிது; எனது திறமை சிறிது. 'ஆசையால் இதனை எழுதி வெளியிடுகிறேன். பிறருக்கு ஆதர்சமாக அன்று, வழிகாட்டியாக." திறமை சிறிது என்று பாரதி கூறுவது அவனது தன்னடக்கத்தைக் காட்டுவதாயினும், தமிழில் புதிய இலக்கியம் எவ்வாறு உருவாக வேண்டுமென்று பாரதி விரும்பினான் என்பதும், அதற்கு எவ்வாறு வழிகாட்டினான் என்பதும், முன்னுரையிலும், இந்த முகவுரையிலும், நூலகத்திலும் காணக்கிடக்கின்றன.

அந்நாளில் இந்நூலைப்பற்றி விமர்சனம் செய்த எஸ். ஜி. ராமானுஜலு நாயுடு அவர்கள் "பாஞ்சாலி சபதத்திலுள்ள ரஸத்தை என்னவென்று புகழ்வேன், அதற்கு அதுவே நிகர்."

என்று பெருமிதத்தோடு புகழ்ந்துரைத்தார். பாஞ்சாலி சபதத்திற்கு மூலம் வியாசர் கதை என்கிறான் பாரதி. கதையின் பெருமை வியாசருக்குப் போகவேண்டுமென்றும் நடைக்கு, தான் பொறுப்பாளி என்றும் பாரதி பாஞ்சாலி சபத சாதனையைப் பங்கு போட்டுக் கொள்கிறான்.

## உண்மை என்ன?

வியாசர் கூறும் கதையைப் படித்துவிட்டு, பாஞ்சாலி சபதத்தையும் படித்து இரண்டையும் ஒப்பு நோக்குவோமானால் நூல் முழுவதிலும் வேறுபாடும் பாரதியின் தனி முத்திரையும் பரவலாகக் காணப்படுவதைப் பார்க்கிறோம். வியாசரின் படைப்பிற்கு பாரதி சிறந்த முறையில் உயிரும், ஒளியும் உதவியிருப்பதையும் காணமுடியும்.

பாரதத்தைத் தமிழ்ப்பண்பிற்கு ஏற்ப வில்லியும் தமிழ்ப் படுத்தியிருக்கிறான். ஆயினும் பாஞ்சாலி சபதத்தில் பாரதி, வில்லியைவிட எவ்வளவோ உயர்ந்து காட்சியளிக்கிறான்.

## பெயரில் புதுமை

சூதுப் போர்ச் சருக்கம் என்ற தலைப்பில் வில்லி எழுதிய பாரதக் கதைப்பகுதியை பாரதி 'பாஞ்சாலி சபதம்' என்று பெயர் சூட்டுகிறான். இவ்வாறு தலைப்புக் கொடுக்க பாரதிக்குத் தான் முடியும், ஏன்?

பாரதி பராசக்தியை வழிபட்டவன். பாரதி தாய் நாட்டை 'மாநிலத்தாயாக்கி' வணங்கியவன்; பாரதி, 'மாதர்க்குண்டு சுதந்தரம்' என்றும், 'பெண்மை வாழ்க' என்றும், 'பெண்மை வெல்க' என்றும் பாடிப் பெண்மைக்குப் புகழ்மாலை சூட்டியவன். எனவே வாய்ப்புக் கிடைக்கும் இடமெல்லாம் பெண்ணின் பெருமையைப் பற்றிப் பேச அவன் தவறியதே இல்லை. தனது 'நெஞ்சையள்ளிய' சிலப்பதிகாரத்தை நினைத்தான்; இரட்டைக் காப்பியங்களில் மற்றொன்று மணிமேகலையை எண்ணினான். பெண் தொடர்

பால் இந்தக் காப்பியங்கள் பேர் பெற்றதை உணர்ந்தான்' எனவே பாஞ்சாலியை முதன்மைப்படுத்திய தனது காப்பியத்துக்கும் 'பாஞ்சாலி சபதம்' எனப் பெயர் சூட்டினுன். கதையின் உணர்ச்சி உச்சம் பாஞ்சாலியின் சபதம். எனவே 'பாஞ்சாலி சபதம்' எனப் பெயர் கொடுத்தான்.

## அமைப்பில் புதுமை

ஒரு சருக்கத்தை ஒரு காப்பியமாகப் படைத்திருக்கிருன் பாரதி. வியாசனிடத்திலிருந்து கதையை எடுத்ததாக அவனே கூறுகிருன். வில்லிபாரதத்தைப் படித்தவர்களுக்குத் தமிழ்ப் பண்புக்கு இணங்க வில்லி படைத்த கதைப்போக்கைச் சிலபல இடங்களில் பாரதி பின்பற்றுவதையும் காண முடியும். கதை அமைப்பில் வியாசனையும் வில்லியையும் பின்பற்ருமல் பாரதி சுயேச்சையாகச் சென்று சிலபல இடங்களில் காலத்துக்கேற்பப் புதுமையாகத் தனி முத்திரை அடித்திருக்கிருன்.

துரியன் - திருதராட்டிரன், தருமன் - சகுனி. விகர்ணன் சபையினர் இடையில் நடைபெறும் சொற்போர்களைக் கூர்ந்து கவனித்தால் பாரதி வியாசனையும் வில்லியையும் துறந்துவிட்டு கவிக்குலபாஸ்கரன் கம்பனேடு கைகோர்த்துத் திரிவதைப் பார்க்கலாம். தருமனின் செல்வ வளத்தைக் குறித்துத் துரியன் பொருமை கொள்ளுதல்; பாஞ்சாலியை அழைத்துவரத் துரியன் துச்சாதனனை ஏவல் போன்ற நிகழ்ச்சிகளில் வியாசன் கதையில் காணும் ரசாபாசங்களைப் பாரதி தள்ளி விட்டான். சகுனி, திருதராட்டிரனைத் தங்கள் பக்கம் திருப்பச் செய்யும் சூழ்ச்சியையும் தருமனைச் சூதாடச் செய்யும் திறமையையும் பாஞ்சாலியைச் சபைக்கு இழுத்துவரும் பான்மையையும் அங்குத் துகில் உரிய சபதம் செய்ய நேர்ந்த விதத்தையும் கூர்ந்து நோக்கினுல் வில்லியிடம் இருந்து பாரதிக்கு உள்ள வேற்றுமையையும் மேன்மையையும் புதுமையையும் காண முடியும்.

பாஞ்சாலியிடம் சென்ற தேர்ப்பாகன் பையப்பையப் பின்வருமாறு சொல்கிருன் :

"தோற்றுத் தமது சுதந்தரமும் வைத்திழந்தார்
சொல்லவுமே நாவு துணியவில்லை, தோற்றிட்டார்
எல்லாரும் கூடியிருக்கும் சபைதனிலே
நின்னை யழைத்துவர நேமித்தான் எம்மரசன்"

துரியன், துச்சாதனன், கண்ணன் முதலியவர்களை அவர்களின் மனப்போக்கை எண்ணிவிட்டுத் தொழிலாளி மகனாகிய இந்தத் தேர்ப்பாகனை எண்ணிப்பாருங்கள். அவன் சொல்லும் "சொல்லவுமே நாவு துணியவில்லை, தோற்றிட்டார்" என்ற சொற்றொடரில் ஆருத் துயரமும் மனத்தாளாமையும் எவ்வளவு தூரம் பெருக்கெடுக்கின்றது பாருங்கள். சீனக் குடியரசின் தலைவர் மாசே துங், 'பெருந்தன்மை மிக்க வர்க்கம்' (Magnanimous Class) என்று தொழிலாளி வர்க்கத்தைக் குறிப்பிட்டுச் சொன்ன கருத்து, பாரதி தேர்ப்பாகனின் மனப்பாங்கைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

## பாட்டமைப்பில் புதுமை

சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், வில்லிபாரதம் போன்றவை தமிழில் தலைசிறந்த பண்டித பாமர ரஞ்சகமான காப்பியங்கள். அவை விருத்தமெனும் ஒண்பாவால் ஆக்கப்பட்டவை. ஆனால் பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' விருத்தப்பாவுக்கு முதலிடம் கொடுக்கவில்லை. பாமரர் பாட்டான நொண்டிச் சிந்துக்கு முதலிடம் கொடுத்திருக்கிருன். 'பாஞ்சாலி சபத'த்தில் காணப்படும் 308 பாட்டுக்களில் 200-க்கு மேற்பட்ட பாட்டுகள் அப்பட்டமான நொண்டிச் சிந்து வகையினவே. விருத்தத்தில் பாடாமல் சிந்து மெட்டில் பாடியதால் ஒன்றும் குறைவு வந்துவிடவில்லை. மாருக நடையில் ஓட்டமும் விறுவிறுப்பும் கதையில் விரைவும் படிப்போர் நெஞ்சில் படித்து முடிக்கவேண்டும் என்ற பேரார்வமும் 'பாஞ்சாலி சபதம்' முழுவதிலும் வளர்ந்து செல்வதைக் காண்கிறோம். இது, இதற்குரிய புதுமை.

இளங்கோவின் வரிப்பாட்டு தேவாரத் திருவாசகம், திவ்யப்பிரபந்தம், பட்டினத்தார், தாயுமானவர், வள்ளலார்,

பாடல்கள், புகழேந்தி பாடல்கள் என்று பேசப்படுகிற அல்லியரசாணி மாலை, நல்லதங்காள் கதை போன்றவை, ஏற்றப்பாட்டுப் போன்ற நாட்டுப்புறப் பாடல்கள்—இவை பொதுமக்களை எண்ணி மிக எளிய பாடல்களாக அமைக்கப் பட்டவை. ஆகவே பாரதிக்கு முன் எத்தனையோ காலம் பொதுமக்கள் நெஞ்சைத் தொடத் தகுந்த எத்தனையோ எளிய பாடல்கள் இருக்கத்தான் செய்தன. ஆயினும் பாமரர் மனத்தில் கூட நேரே பதியத்தக்க வண்ணம் ஒரு காப்பியம் முழுதுமே எளிமையும் தெளிவும் சுருங்கிய சொற்களும் கொண்ட சிந்து நடையில் ஆக்கப்பட்டது பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' ஒன்றுதான். இரண்டாயிரம் ஆண்டைய தமிழிலக்கியத்தில் காணப்படாத புதுமை இது.

## கடவுள் வாழ்த்தில் புதுமை

பாரதி பிரமத்தைப் பாடியிருப்பது தமிழிலக்கியத்தில் மற்றொரு புதுமை. அடுத்தபடியாக சரஸ்வதி வணக்கம் என்று பாடியிருக்கும் பாடலிலும் அரிய புதிய கற்பனைகள் பூத்துக் குலுங்கி நிற்கின்றன. இந்த வணக்கத்தில் "கள்ளைக் கடலமுதை நிகர் கவி" என்று பாடுகிறான். கள், கடலமுது இந்த இரண்டையும் கவிதைக்கு இங்கு பாரதி உவமை கூறு கிறான். கவிகளில் மிகச் சிறந்த கவிகட்குக் கற்பனை தானே ஊறும் என்கிறார்கள் கவிஞர்—விமர்சகர்கள், பலர் நெஞ்சம் சிவக்க ஆய்ந்து ஆய்ந்து நல்ல கற்பனைகளைக் காண்கிறார்கள். இயற்கையாக ஊறும் கற்பனையையும் அமுதம் கடைந்து முயன்று திருத்திச் செம்மைப்படும் கற்பனையையும் குறிக் கின்றன. பாரதி கள்ளை முதலாவதாகவும் அமுதத்தை இரண் டாவதாகவும் சுட்டி, கவிக்கு உவமை கூறுவது புதுமையிற் புதுமை என்பதோடு மட்டுமல்ல, எண்ணியெண்ணி இன்புறத் தக்கதுமாகும். அதே வணக்கப் பாட்டில்,

"வேதத் திருவிழியாள்—அதில்
மிக்கபல் லுரையெனும் கருமை யிட்டாள்"

என்றும்,

"கற்பனைத் தேனிதழாள்—சுவைக்
காவிய மெனுமணிக் கொங்கையினுள்"

என்றும் பாடுகிற அடிகள் ஆழ்ந்த கருத்து வளமும் அற்புதக் கற்பனை வளமும் கொண்டவை.

நூலுக்கு உரை எழுதுவதைக் கண்ணுக்கு மையிடுவதோடு ஒப்புக்கூறுதல் அழகினும் அழகு, மை கூடினும் குறையினும் கண்ணுக்குக் கேடு விளைக்கும்; அதைப் போன்று உரை என்று பாரதி கூறுவது எவ்வளவு சிந்திக்கத் தக்கது! கற்பனையையும் காவியத்தையும் பற்றி பாரதி கூறியிருப்பதை நினைக்கும் தோறும் நெஞ்சில் புதுத்தேன் பிளிற்றிக்கொண்டே இருக்கும்.

மற்ருேரிடத்தில் பராசக்தியையும் கலைமகளையும் வணங்கிப் பாடியிருக்கும் பாடல்களும் புதுமை நயங்கள் மிக்கவையே; அவை காலத்திற்கேற்ற சிற்ப, விஞ்ஞானப் புதிய கருத்துக் களைத் தழுவி எழுதப்பட்டவை. கடவுள் வாழ்த்துப் பாடல்கள் என்று ஆயிரமாயிரம் பாடல்கள் நமது தமிழிலக் கியத்தில் உண்டு. ஆயினும் இந்த இரண்டு பாடல்களும் தனியழகும் கவர்ச்சியும் புதுநயமும் படைத்தவை. தன்னைக் கலைப்புலவனுக்கி மதிக்கப்படுவோனுகவும் மிதிக்கப்படாத வனுகவும் ஆக்குமாறு பராசக்தியிடம் பாரதி வேண்டுகிருன்:

"ஆங்கொரு கல்லை வாயிலிற் படிஎன்
றமைத் தனன் சிற்பி, மற் ருென்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்
றுயர்த்தினுன்; உலகினேர் தாய்நீ!
யாங்கணே, எவரை, எங்ஙனஞ் சமைத்தற்
கெண்ணமோ, அங்ஙனம் சமைப்பாய்
ஈங்குனைச் சரணென் றெய்தினேன்; என்னை
இருங்கலைப் புலவனுக் குதியே" (பாட்டு 205)

கலைமகளை நோக்கி என்றும் அணுக்கள் இயங்கிக் கொண்டே இருப்பதுபோல் தன் மனமும் அருளில் இயங்க வேண்டுமென்று பாரதி வரம் கேட்கிருன்:

"இடையின்றி அணுக்களெலாம் சுழலுமென
இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்;
இடையின்றிக் கதிர்களெலாஞ் சுழலுமென
வானூலார் இயம்பு கின்றார்.
இடையின்றித் தொழில்புரிதல் உலகினிடைப்
பொருட்கெல்லாம் இயற்கை யாயின்
இடையின்றிக் கலைமகளே; நினதருளில்
எனதுள்ளம் இயங்கொ ணாதோ?"

(பாட்டு 206)

## மூவரும் பாரதியும்

"பாஞ்சாலி சபதம்" முழுவதையும் சற்று உன்னிப்போடு படித்தால் வள்ளுவன், இளங்கோ, கம்பன் ஆகிய முப்பெரும் புலவர்களின் அறிவை, கருத்துரைகளை பாரதி அதில் கைவந்த விதத்தில் எவ்வாறு நடமாட விடுகிறான் என்பது தெரியும். சிறந்த இலக்கியங்களை எப்படிப் படிக்க வேண்டும், எப்படித் தன்வயப்படுத்த வேண்டும் என்பதற்குப் பாரதி 'பாஞ்சாலி சபதத்'தில் ஒளி விளக்காகச் சுடர் விடுகிறான். இந்த நூலில் பக்கத்துக்குப் பக்கம் கம்பன் பாணியைக் காணலாம்.

கம்பனின் மந்தரை சூழ்ச்சிப் படலத்தையும் பாரதியின் திரிதராட்டிர சகுனி விவாதப் பகுதியையும் இணைத்துப் படித்துப் பாருங்கள். கம்பனின் வழித்தோன்றல் எப்படிக் காட்சியளிக்கிறான் என்பது விளங்கும். ராம காதையில் தேவர்கள் களித்து ஆர்ப்பரிப்பதைப் பலபடக் காணலாம். அந்த அடிச் சுவட்டைப் பின்பற்றி பாஞ்சாலி சபதத்திலும்,

"பதிவுறுவோம் புவியிலெனக் கலிமகிழ்ந்தான்
பாரதப்போர் வருமென்று தேவரார்த்தார்"

என்பன போன்ற அடிகளைப் பரக்கக் காணலாம்.

துரியோதனன் திரிதராட்டினனைப் பழித்துக் கூறுகிறான்:

"கல்லிடை நாருரிப்பா ருண்டோ—நினைக்
காரணங் காட்டுத லாகுமோ"

(பாட்டு 90)

இங்கு, 'களித்தானைக் காரணங் காட்டுதல்' என்ற குறள் வரியைப் பாரதி அப்படியே எடுத்தாள்கிறான். 'பாஞ்சாலி சபதம்' முழுவதையும் இவ்வாறு திருக்குறளின் சொற்களையும் சொற்றொடர்களையும் கருத்துரைகளையும் கொண்டு வயிரமிழைத்ததுபோல அணிபெறச் செய்வதைப் பார்க்கலாம். பாரதி அத்தினபுரத்தை வருணிக்கும்பொழுது,

"ஆரியவேல் மறவர்—புவி
ஆளுமோர் கடுந்தொழில் இனிதுணர்ந்தோர்..."

அங்குள்ளார் என்று கூறுகிறான். சிலப்பதிகாரத்தில் நெடுஞ்செழியன் மறைவைச் சாத்தனார் வாயிலாகக் கேட்ட சேரன் செங்குட்டுவன்,

"மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதகவு இன்று"

என்று கூறிச் செங்கோன்மை கடுந்தொழில் என்ற கருத்தைத் தெரிவிக்கிறான். இந்தச் சிலப்பதிகாரக் கருத்தை நினைவில் வைத்தே பாரதி மேற்கூறியவாறு பாடியிருக்கிறான். இவ்வாறு பழைய, சிறந்த இலக்கியங்களைத் தன்வயப்படுத்தி பாரதி பாஞ்சாலி சபதத்தில் இடம், பொருள், ஏவலுக்கு ஏற்பப் பல நயங்களைக் காட்டுகிறான்.

இலக்கியப் புலமை கவிஞனுக்கு இன்றியமையாதது என்று நவீன திறனாய்வாளர்கள் கருதுகிறார்கள். செம்மை சான்ற இலக்கியப் பிடிப்புடன் பாடுகிறவர்கள், இயற்கை ஊற்று, அருவி ஆகியவற்றுக்கு ஒப்பானவர்கள் என்றும் மதிப்பிட்டுப் பாராட்டிப் பேசுகிறார்கள். பாரதியின் கவிதை ஊற்றும் கவிதை அருவியும் "பாஞ்சாலி சபதம்" முழுவதிலும் பாய்ந்தோடுவதைக் காணலாம்.

## படப்பிடிப்பில் புதுமை

நாட்டுப் படலம், நகர்ப் படலங்களைப் பற்றிப் பாடும் பொழுது உலக இலக்கியத்தில் நல்லதை மட்டும் சித்திரித்துக் காட்டுவதே மரபு, பாரதி "உள்ளத்திலே உண்மையொளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்" என்று பாடிய யதார்த்தவாதக் கவிஞன் (Realist) எனவே அத்தினபுரியைப் பற்றிப் பாடும் பொழுது அந்நகர வாழ்க்கையின் மேடுபள்ளம் இரண்டையும் சாற்றுவதைப் பாருங்கள். அங்கு நல்லோர் வாழுகிறார்களாம், அதே பொழுதில் தீயோரும் வாழுகிறார் களாம். இது அவர் வருணனை:

"மெய்த்தவர் பலருண் டாம்;—வெறும்
 வேடங்கள் பூண்டவர் பலருமுண் டாம்;
உய்த்திடு சிவஞானம்—கனிந்
 தோர்ந்திடும் மேலவர் பலருண்டாம்;
பொய்த்த விந்திரசா லம்—நிகர்
 பூசையும் கிரியையும் புலை நடையும்
கைத்திடு பொய்ம்மொழி யும்—கொண்டு
 கண்மயக் காற்பிழைப் போர்பல ராம்"

(பாட்டு 9)

## பழமையைக் கடிவதில் புதுமை

கலைஞர்கள் எல்லோரும் புதுமை நயங்களை முழுமூச் சுடன் விரும்புபவர்களும் விரும்பச் செய்வோர்களுமே.

"பாரடியோ! வானத்திற் புதுமை யெல்லாம்
 பண்மொழீ! கணந்தோறும் மாறி மாறி
ஓரடிமற் றோரடியோ டொத்த லின்றி
 உவகையுற நவநவமாத் தோன்றும் காட்சி
யாரடிஇங் கிவைபோலப் புவியின் மீதே
 எண்ணரிய பொருள்கொடுத்தும் இயற்றவல்லார்!"

(பாட்டு 148)

என்ற அடிகளைப் பாஞ்சாலிக்கு அருச்சுனனைக் கொண்டு சொல்ல வைக்கும் பொழுது பாரதியின் புதுமை வேட்கை இமயச் சிகரத்தையும் தாண்டிச் செல்கிறது; கலைஞனின் புதுமைப் பார்வை நுணுக்கமாகவும் தெளிவாகவும் கச்சிதமாக வும் புலனாகிறது. வாழ்க்கையில் கணந்தோறும் மாறி மாறி வரும் புதுமையை மேளதாளங்களுடன் வரவேற்கும் பாரதி, பழமையின் பூசணம் பூத்த தன்மையை, அழுகிநாறும் தன் மையை அருமையாகச் சாடும் புதுமையைக் காணுங்கள்.

பொய்மையயனே சூதாடும் சிறுமையைப் பழைய அறம் என்று தருமன் நெஞ்சில் படும்படி சகுனி சதி செய்து விட் டான். தருமன் சூதாட இணங்கினான். பாரதி பழமைக்குத் தலை வணங்கும் பாரத மக்களின் போக்கை இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி உருக்கமாக அம்பலப்படுத்துகிறான்:

"முன்பி ருந்ததொர் காரணத் தாலே
மூடரே, பொய்யை மெய்யென லாமோ?
முன்பெனச் சொலின் நேற்றுமுன் பேயாம்;
மூன்று கோடி வருடமும் முன்பே;
முன்பிருந் தெண்ணி லாது புவிமேல்
மொய்த்த மக்க ளெலாம் முனிவோரோ?

"நீர்பி றக்குமுன் பார்மிசை மூடர்
நேர்ந்த தில்லை எனநினைந் தீரோ?
பார்பி றந்தது தொட்டின்று மட்டும்,
பலப லப்பல பற்பல கோடி
கார்பி றக்கும் மழைத்துளி போல
கண்ட மக்களனைவருள் ளேயும்
நீர்பி றப்பதன் முன்பு, மடமை
நீசத் தன்மை இருந்தன வன்றே?

"பொய்யொ ழுக்கை அறமென்று கொண்டும்,
பொய்யர் கேலியைச் சாத்திர மென்றும்
ஐயகோ, நாங்கள் பாரத நாட்டில்
அறிவி லாரறப் பற்றுமிக் குள்ளோர்

நொய்ய ராகி அழிந்தவர் கோடி
நூல்வ கைபல தேர்ந்து தெளிந்தோன்
மெய்ய றிந்தவர் தம்மு ளுயர்ந்தோன்
விதியி னாலத் தருமனும் வீழ்ந்தான்''

(பாட்டுகள் 179, 180, 181)

இங்கு முன்பு, முன்பு என்று கூறும் பழமைப் பிடிப்பை உடைத்தெறியும் புதுமைப்பாங்கு நேர் நிகரற்றது.

## உவமைப் புதுமை

புதுமை நயம் மிக்க பாரதியின் இரண்டொரு உவமைகளை இங்குத்தர விரும்புகிறேன்.

துரியனின் தீய ஆசைக்கு திரிதராட்டிரனை இணங்க வைக்கச் சகுனி முயற்சிக்கிறான். திரிதராட்டிரனிடம் மிக நயமாகப் பேசுகிறான்; அவன் உனது மகனல்லவா, உன் போன்றுதானே இருப்பான் என்று நயம்படச் சொல்கிறான்:

''........................ ஒரு
தீபத்தில் சென்று
கொளுத்திய—பந்தம்
தேசு குறைய எரியுமோ?''

அவனிடம் தோன்றிய மகன் என்பதற்கு ''ஒரு தீபத்தில் சென்று கொளுத்திய பந்தம்'' என்று எவ்வளவு அழகாக, புதுமையாக உவமித்துக் கூறுகிறான் பாரதி, பாருங்கள்.

மற்றொன்று

விதுரன் சகுனியை வளர்த்ததை வெறுக்கிறான். துரியன் அவனை விரட்டிவிட்டு பாண்டவர்களை நட்புக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறான்.

''நாட்டுளே புகழ் ஓங்கிடுமாறு
இந்நரியை விற்றுப் புலிகளைக் கொள்வாய்''

என்று சகுனி நரி; பாண்டவர் புலிகள். நரி அகத்தில் வஞ்சனையுடன் புறத்தில் நட்புப் பாராட்டும். புலி, வெளிப்படை

யாக எதிர்க்குமாயினும் எத்துவாளித்தனம் செய்யாது. எத்துணை அருமையான புதிய உவமை!

வேறொன்று

துரியன் மனத் தெழுந்த பொறாமையைப் பாரதி எரிமலைக்கு உவமிப்பது மிக அருமையாக இருக்கிறது.

"குன்ற மொன்று குழைவுற் றிளகிக்
குழம்பு பட்டழி வெய்திடும் வண்ணம்
கன்று பூதலத் துள்ளுறை வெம்மை
காய்ந்தெ ழுந்து வெளிப்படல் போல,
நெஞ்சத் துள்ளோர் பொறாமை யெனுந்தீ
நீள்வதா லுள்ளம் நெக்குரு கிப்போய்
மஞ்சன் ஆண்மை மறந்திண்மை மானம்
வன்மை யாவும் மறந்தனன்"

(பாட்டுகள் 38, 39)

பிறிதொன்று

பாஞ்சாலியைப் பணயம் வைக்கும்படி, தருமனிடம் சகுனி கூறியபொழுது துரியனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை நாய் தேன்கலசத்தை எண்ணி மகிழ்ந்ததோடு ஒப்பிடுவது பிரமாதம்.

"நன்று நன்று என்று துரியோதனன்—சிறு
நாயொன்று தேன்கல சத்தினை—எண்ணித்
துன்று மூவகையில் வெற்றுநா—வினைத்
தோய்த்துச் சுவைத்து மகிழ்தல்போல்"

(பாட்டு 242)

காரசாரம், வேகம், இழிவுணர்ச்சி முதலியவை இந்த உவமையில் மூக்கில் விரல் வைக்கும் வண்ணம் பாய்ந்தோடி வருகின்றன.

## பேச்சு வழக்குப் புதுமை

பாரதி மக்களின் புதல்வன். எனவே நிகழ்ச்சிகளை எதிரொலிக்கும் பொழுது மக்கள் கோணத்தில் நின்றே அவன்

எதிரொலிப்பது வழக்கம் மட்டுமல்ல; சராசரி மனிதன் எதிரொலிப்பதில் காணக் கிடக்கும் ஜீவத் துடிப்புள்ள கூறு களுக்கே அழுத்தம் கொடுப்பவன் அவன். மங்கலம், குழூஉக் குறி முதலிய இலக்கண மரபுகளைப் பிடிவாதமாகக் கடைப் பிடிப்பவனல்லன் அவன். சூழ்நிலையும் வாழ்க்கை வர லாறுமே இலக்கண விதிகளைவிட முதலிடத்துக்கு உரியன என்ற புதுமைப் புரட்சிக்கொள்கை உடையவன் அவன். இந்த உண்மையை அவன் இலக்கியம் முழுவதிலும் பரக்கக் காணலாம்:

இரண்டொரு எடுத்துக்காட்டுகள் தருகிறேன். *'சீச்சீ'* என்ற சொல் சாதாரணமாக நல்ல இலக்கியத்தில் பயின்று வருவதல்ல. இந்த நூற்றுண்டின் தமிழிலக்கியத்தில் ஆகச் சிறந்த படையல் என்று மதிப்பிடத்தக்க 'பாஞ்சாலி சபதத்' தில் *'சீச்சீ'* என்ற சொல்லைப் பாரதி பயன்படுத்துகிறான்.

சூதாட்டத்தில் சகுனியின் பேச்சில் மயங்கியும் சூடேறி யும் தருமன், நாட்டைப் பணயம் வைத்து இழக்கிறான். தேச பக்தியின் திருவுருவான பாவேந்தன் பாரதிக்கு இதைப் பொறுக்க முடியவில்லை.

> "...தருமன் தேயம் வைத்திழந்தான்—*சீச்சீ*
> சிறியர் செய்கை செய்தான்"
>
> (பாட்டு 219)

என்று தருமனைக் கடிகிறான் பாரதி.

'நாய் மகன்' — என்று சாதாரணமாக இலக்கியத்தில் வைவதில்லை. சண்டை மிகச் சூடேறிப் பொதுமக்களிடையில் மோதல் நிகழ்கிறபொழுதுதான் நாம் இத்தகைய சொற்களைக் கேட்க முடிகிறது.

பீமன் பொறுக்குமட்டும் பொறுத்துப் பார்த்தான். கோபம் இரண்டொரு கணம் அணை கடந்து பாய்ந்தது. சபதம் செய்தான், அந்தச் சமயத்தில் துரியோதனனை நாய் மகன்' என்று பேசுகிறான்.

## அபூர்வ நயங்கள்

ஒன்று

"..............................அந்தப்
புலைத்தொழில் சகுனியும் புறமிருந்தான்"
(பாட்டு 18)

பண்பாடு, நாகரிகம், மனிதத்தன்மை ஆகியவற்றைக் 'கலை' என்ற சொல்லால் குறிப்பிட்டால் இவற்றுக்கு ஏறுமாறானவைகளைப் 'புலை' என்று குறிப்பிடவேண்டும். புலைத் தொழில் என்று வள்ளுவப் பேராசானும் குறிப்பிடுகிறார். 'புலைத் தொழில் சகுனி' என்று பாரதி கூறி, சகுனி மாமாவை முழு உருவத்துடன் நமது முன் கொண்டுவந்து நிறுத்துகிறான்.

இரண்டு

"சுந்தரமாம் ஒரு காப்பியம் செய்தார்
................................"
(பாட்டு 110)

கல்லையும் மண்ணையும் பொன்னையும் கவர்ச்சி மிக்க மணிகளையும் கொண்டு செய்யப்பட்ட புதுமனையைப் பாரதி அழகு மிக்க காப்பியமாகக் காண்கிறான், நமக்குக் காட்டுகிறான்.

'மலர்விழிக் காந்தங்கள்', 'ஆரியவேல் மறவர்', 'வழ வழத் தருமன்', 'மறைகுல மறவர்', 'காவல் இழந்த மதி கொண்டான்', 'கரைதத்தி வழியும் செருக்கினன்', 'அறத் தோன்றல்', 'வென்றிகொள் பெரும் சூதர்' — முதலிய வளமிக்க சொற்றொடர்கள் புதுமை நயம் மிக்கவை என்று சொல்லவும் வேண்டுமோ?

## உலகம் இரு பிரிவு

பிறரைத் தாழ்த்தித் தன்வாழ்வை உயர்த்தும் ஒரு உலகம். பிறர்க்கும் உதவித் தானும் உயரும் மற்றொரு உலகம். இந்த இரண்டு போக்குகளையும் 'பாஞ்சாலி சபத'த்தில் நயம்படச் சித்திரிக்கிறான் பாரதி.

முதல் உலகத்தைச் சகுனி திரிதராட்டிரனுக்குச சித்தி ரித்துக் காட்டுகிறான்.

"பிழை யொன்றே அரசர்க்குண்டு கண்டாய்
பிறரைத் தாழ்த்துவதிற் சலிப்பெய்தல்"
(பாட்டு 110)

இரண்டாவது உலகத்தை தருமன் சகுனிக்குக் காட்டு கிறான்.

"ஐய, செல்வம் பெருமை இவற்றின்
காத லாலர சாற்று னல்லேன்;
காழ்த்த நல்லற மோங்கவு மாங்கே
உண்மை சான்ற கலைத்தொகை யாவும்
சாதலின்றி வளர்ந்திடு மாறும்,
சகுனி! யானர சாளுதல், கண்டாய்!
என்னை வஞ்சித்துஎன் செல்வத்தைக்
கொள்வோர்

என்ற னக்கிடர் செய்பவர் அல்லர்,
முன்னை நின்றதொர் நான்மறை கொல்வார்:
மூது ணர்விற் கலைத்தொகை மாய்ப்பார்,
பின்னை என்னுயிர் பாரத நாட்டில்
பீடை செய்யுங் கலியை அழைப்பார்"
(பாட்டுகள் 173, 174)

இங்குச் சமுதாய அறத்தைப் பாரதி தருமன் மூலம் பேச வைக்கிறான்.

## தேசபக்த புதுமை

விதுரன் வாய்மொழியாகவும், தருமன் வாய்மொழி யாகவும் கதையின் ஓட்டத்திலேயே பாரதி மிக அற்புதமாக நாட்டுப்பற்றை வெளிப்படுத்துகிறான். பாண்டவர்களைச் சகுனி பேச்சைக் கேட்டுச் சூதுக்கு அழைக்கிற செய்தியை அறிந்ததும் விதுரன் சொல்கிறான்.

"போச்சுது! போச்சுது பாரத நாடு!
போச்சுது நல்லறம்! போச்சுது வேதம்!
ஆச்சரி யக்கொடுங் கோலங்கள் காண்போம்
ஐய, இதனைத் தடுத்தல் அரிதோ?"

(பாட்டு 113)

அவனே தூது செல்லும்போது சொல்கிறான்:

"பேரறமும் பெருந்தொழிலும் பிறங்கு நாடு,
பெண்களெல்லாம் அரம்பையர்போல் ஒளிரும் நாடு
வீரமொடு மெய்ஞ்ஞானம் தவங்கள் கல்வி
வேள்வி எனும் இவையெல்லாம் விளங்கும் நாடு
சோரமுதற் புன்மையெதுந் தோன்றா நாடு,
தொல்லுலகின் முடிமணிபோல் தோன்றும்நாடு,
பாரதர் தந்நாட்டினிலே நாசமெய்தப்
பாவியேன் துணைபுரியும் பான்மை என்னே!"

(பாட்டு 118)

'பாஞ்சாலி சபத'த்தில் இந்த இடங்களோடு,

"பின்னை என்னுயிர் பாரத நாட்டில்
பீடை செய்யும் கலியை அழைப்பார்"

(பாட்டு 174)

என்று தருமன் சகுனிக்குச் சொல்லும் இடத்தையும்,

"ஐயகோ, நங்கள் பாரத நாட்டில்
அறிவிலார் அறப்பற்று மிக்குள்ளோர்
நொய்யராகி அழிந்தவர் கோடி........."

(பாட்டு 181)

என்று சூதாடத் தருமன் இணங்கியதை எதிரொலித்துக் கவிக் கூற்றாகச் சொல்லுமிடத்தையும் இணைத்துப் படித்தால் கல்லையும் கரைக்கும் பாரதியின் தேசபக்தப் புதுமை நன்கு விளங்கும்.

## ஆத்திரப் புதுமை

துச்சாதனன் என்ற மனித மிருகம் பாஞ்சாலியை, கூந்தலைப் பற்றி, கரகரென சபைக்கு இழுத்து வருகிறான். ஊரார்கள் பாதையின் இருமருங்கும் நின்று, பார்த்து, 'என்ன கொடுமை இது' என்று முணுமுணுத்துவிட்டு, சும்மா நிற்கிறார்கள். கொடுமையைத் தடுக்க ஒன்றும் செய்யவில்லை. பாரதியால் — பெண்ணின் பெருமையைக் காக்க வந்த ஜன நாயகப் பெரும் புலவன் பாரதியால் — சும்மா இருக்க முடியவில்லை. தானே காட்சியில் குதித்து விடுகிறான்; ஆத்திரத்தின் உச்சியில் நின்று ஊரவரை இழித்துப் பழித்துக் கடிகிறான் :

"கக்கக்கென்று கனைத் தேஅப் பெருமூடன்,
பக்கத்தில் வந்தேஅப் பாஞ்சாலி கூந்தலினைக்
கையினால் பற்றிக் கரகரெனத் தானிழுத்தான்.
'ஐயகோ' என்றே அலறி உணர்வற்றுப்
பாண்டவர் தம் தேவியவள் பாதிஉயிர் கொண்டுவர
நீண்ட கருங்குழலை நீசன் கரம்பற்றி
முன்னிழுத்துச் சென்றான், வழிநெடுக
மொய்த்தவராய்
'என்ன கொடுமைஇது' என்று பார்த் திருந்தார்,
ஊரவர் தம் கீழ்மை உரைக்கும் தரமாமோ?
வீரமிலா நாய்கள் விலங்காம் இளவரசன்
தன்னை மிதித்துத் தராதலத்தில் போக்கியே
பொன்னை அவள் அந்தப் புரத்தினிலே சேர்க்காமல்,
நெட்டை மரங்களென நின்று புலம்பினார்
பெட்டைப் புலம்புல் பிறர்க்குத் துணைஆமோ?"

இங்கு கவிதா வேகம் உணர்ச்சியின் கொடுமுடியைத் தொடுகிறது. நிகழ்ச்சி நேரே நிகழ்வது போலிருக்கிறது. கவிஞன் இங்கு தானே கதைக்குள் ஒரு பாத்திரமாகிவிடுவது முதல்தரப் புதுமை.

தருமன் நாட்டைப் பணயம் வைத்துச் சூதாடினான். தோற்றான்; பீமன் பொறுத்தான். தம்பியையும் தன்னையும்

பணயம் வைத்தாடித் தோற்றான். பீமன் பொறுத்தான். பாஞ்சாலியையும் தோற்றான். துச்சாதனன் பாஞ்சாலியை சபைக்கு இழுத்து வந்தான்; சபையில் அவளை 'தாதியடி தாதி' என்று இழித்துப் பேசினான்; திரௌபதி சபையோரிடம் நீதி கேட்டு அழுகிறாள். பாவியிலும் பாவி, 'வெறும் மாடு நிகர்த்த' துச்சாதனன் அப்பொழுதும் பாஞ்சாலியை வாய்க்கு வந்தபடி வைது அவள் கூந்தலைப் பற்றி இழுக்கிறான். பீமனுடைய கோபாவேசம் கரையை உடைக்கிறது!

"இது பொறுப்பதில்லை — தம்பீ!
எரிதழல் கொண்டுவா
கதிரை வைத்திழந்தான் — அண்ணன்
கையை எரித்திடுவோம்"

என்று வாய்திறந்து கர்ச்சிக்கிறான். இங்கும் பாரதி ஆவேச மயமாக நிற்கும் புதுமையை அனுபவிக்க முடிகிறது.

## நிதானப் புதுமை

அடுத்த கணத்தில், பீமனின் ஆவேச முழக்கத்தை அருச்சுனனின் நிதானப் பேச்சு இருந்த இடம் தெரியாமல் செய்துவிடும் அற்புதச் சாதனையைக் காட்டி, நயம்படப் புதுமை செய்கிறான் பாரதி. அறப்போரில் ஈடுபடுவோர்க் கெல்லாம், என்றென்றும் தெளிவும் உறுதியும் அளிக்கத்தக்க ஓர் நிகரற்ற உண்மையை இங்கு பாரதி புத்தம் புதுமுறையில் வெளியிடுகிறான்.

"தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்;
தருமம் மறுபடி வெல்லும் எனும் இயற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்
வழிதேடி விதிஇந்தச் செய்கை செய்தான்;
கருமத்தை மென்மேலும் காண்போம்; இன்று
கட்டுண்டோம் பொறுத் திருப்போம் காலம்
மாறும்"
(பாட்டு 283)

## அழுகையும் துயரமும் ஆவேசமாக வெடிக்கும் புதுமை

சபையில் எல்லோரும் சோளக் காட்டுப் பொம்மைபோல் இருந்தார்கள். பெரியவனான வீட்டுமன் மட்டும், முன்னால்-பின்னால் வேதாந்தம் பேசி, துரியன் செய்கை நீதி எனக்கூறி, "தீங்கு தடுக்கும் திறமிலேன்" என்று நரைத்த சமாதானம் சொன்னான்.

பாஞ்சாலியின் உணர்ச்சிவேகம் 'பளிச்சென்று' எதிரொலிக்கிறது. "சாத்திரிமார்களே! உங்கள் மௌன நிலையைப் பார்த்தால், 'பேயரசு செய்தால் பிணம் தின்னும் சாத்திரங்கள்' என்பது பட்டப்பகல் வெட்ட வெளிச்சம் ஆகிறது!" என்கிறாள்.

இந்த ஒரு வரியில் பாரதியின் முழு வடிவமும் ஒலியும் எதிரொலியும் செய்வதைக் காண்கிறோம்.

## குணச்சித்திரப் புதுமை

தருமனையோ, துரியனையோ எந்தப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டாலும், பாரதம் முழுவதையும் படித்தால் எந்த ஒன்றைக் கண்டு கொள்வோமோ அதை, பாரதி, பாஞ்சாலி சபதத்தில் ஒரே இடத்தில் தீட்டிக் காட்டும் குணச்சித்திரத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். இலக்கியத்தில் பாத்திரங்களை அறிமுகப்படுத்தும் பாணி அத்தனை புதுமை நயம் மிக்கது.

எடுத்துக்காட்டு :

"புத்தி விவேக மில்லாதவன்;— புலி
போல உடல்வலி கொண்ட வன்— கரை
தத்தி வழியும் செருக்கினால்— கள்ளின்
சார்பின் றியேவெறி சான்ற வன்;— அவ
சக்தி வழிபற்றி நின்ற வன்— இன்பம்

நத்தி மறங்கள் இழைப்ப வன்;— என்றும்
நல்லவர் கேண்மை விலக்கி னேன்''

(பாட்டு 265)

துரியனின் குணச்சித்திரம் சரிதானா?

இன்னொரு எடுத்துக்காட்டு :

''ஆவியில் இனியவளை— உயிர்த்து
அணிசுமந்து உலவிடு செய்யமுதை
ஓவியம் நிகர்த்தவளை— அருள்
ஒளியினைக் கற்பனைக் குயிர தனைத்
தேவியை, நிலத்திரு வை,— எங்கும்
தேடினும் கிடைப்பரும் திரவியத்தை,
படிமிசை இசையுற வே— நடை
பயின்றிடும் தெய்விக மலர்க்கொடியை
கடிகமழ் மின்னுரு வை— ஒரு
கமனியக் கனவினைக் காதலினை,
வடிவுறு பேரழ கை— இன்ப
வளத்தினை.........''

(பாட்டுகள் 243, 244)

என்ற பெண்மை நலத்தின் பல்வேறு குணங்களை, சதமானம் பிசகாது சேர்மானம் செய்து, பாஞ்சாலியை நம்முன் அமர சித்திரமாக நிறுத்தும் பாரதி பாடல்களின் புதுமை நயத்திற்கு ஈடு ஏது? எடுப்பு ஏது?

## ஏச்சில் புதுமை

நீதி பேசிய விதுரனைத் துரியன் பழிக்கிறான். இந்த இடத்தில் வில்லி ''வாழ்வு இங்கே, மனம் அங்கே'' என்று ஏசுகிறான்; ஆனால் பாரதியோ பின்வருமாறு அந்த ஏச்சைப் புதுமை செய்கிறான் :

''ஐவருக்கு நெஞ்சும்— எங்கள்
அரண்மனைக்கு வயிறும்
தெய்வம்அன் றுனக்கே— விதுரா!
செய்து விட்ட தேயோ?

## புதுமையில் புதுமை

ஒன்று

"கோயில் பூசை செய்வோன்— சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போன்— வீட்டை
வைத்திழத்தல் போலும்...
தேயம் வைத்திழந்தான்"

என்று தருமனை, தேசபக்தப் பெருங் கவிஞனான பாரதி கடிகிறான். அரசன் காவலனே யன்றி நாட்டிற்கு உடையவன் அல்ல என்ற பழைய சிலம்புக் கருத்தை நினைந்து, புதிய ஜன நாயகக் குரலில் தருமன் மீது கண்டனக் கணை தொடுக்கிறான்.

இரண்டு

"வேள்விப் பொருளினை யே— புலைநாயின் முன்
மென்றிட வைப்பவர் போல்,
நீள்விட்டப் பொன்மாளி கை— கட்டிப் பேயினை
நேர்ந்து குடியேற்றல் போல்
ஆள்விற்றுப் பொன்வாங்கி யே— செய்த பூணொர்
ஆந்தைக்குப் பூட்டுதல் போல்"

(பாட்டு 245)

பாஞ்சாலியை, தருமன் கீழ்மக்களுக்கு அடிமைப்படுத்தினான் என்று கூறிவிட்டு, பாரதி:

"செருப்புக்குத் தோல்வேண்டி யே—இங்குக் கொல்வரோ
செல்வக் குழந்தையினை?"

என்ற கேள்வியைப் போட்டுவிட்டு, 'பாஞ்சாலியா பணயப் பொருள்?' என்று அவன் புதுமை வேகத்தோடு அழுத்திக் கேட்கும் பொழுது, சர்வ சம்மதத்துடன் தருமனைச் சபிக்கத் தோன்றுகிறது.

மூன்று

"தருமத்தின் வாழ்வுதன்னைச் சூது கவ்வும்
தருமம் மறுபடி வெல்லும் என்னும் உண்மை"

"தருமத்தை" பாரதி புதுச் சுவை தட்டச் சொல்லி இந்த உண்மை விளக்கமாக பாஞ்சாலியின் துகில் வளர்ந்ததை,

"பொய்யர் தம்துயரினைப் போல்— நல்ல
புண்ணிய வாளர்தம் புகழினைப் போல்
.......................................தம்பி
கழற்றிடக் கழற்றிடத் துணிபுதி தாய்
...............—.........................
பட்டினிழை பட்டினிழை யும்— பல
புதுப்புதுப் புதுப்புதுப் புதுமைக ளாய்
.................................................
வண்ணப் பொற்சேலைக ளாம்— அவை
வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தன வே"

என்று பாவேந்தன் பாடுகிறபொழுது. "ஆகா" வென்று மூக்கில் விரல் வைக்கவே முடிகிறது.

## சபதப் புதுமை

எடுத்துக் காட்டாக,

"சீரிய நண்பன் கண்ணன் கழ லாணை;
கார்த்தடங் கன்னி எந்தேவி— அவள்
கண்ணிலும் காண்டிவ வில்லினும் ஆணை"
(பாட்டு 306)

என்று, அருச்சுனன் சபதம் செய்கிறான். துணை வலி, கொள்கை வலி, தன் வலி மீது எவ்வளவு புதுமையாகச் சபதம் செய்யப்படுகிறது. பார்த்தீர்களா? ஆழ்ந்த கருத்துள்ள எளிய சொற்களை உணர்ச்சிக் கடலில் மிதக்கவிடும் பாரதியின் திறன் தனக்குத்தானே நிகரானது

ஆணையின் உச்சத்தில் மகா நம்பிக்கையோடு அருச்சுனன் நின்று கொண்டு,

"போர்த் தொழில் விந்தைகள் காண்பாய்—ஏ!
பூதலகமே! அந்தப் போதினிலே"

என்று உச்சஸ்தாயியில் அறப்போரின் சர்வ நிச்சய வெற்றியை முழங்கும் பொழுது, உலகம் முழுவதுமே ஒலியும் எதிரொலியும் கிளம்பி, அந்தக் 'கணீர்' முழக்கத்தோடு ஒன்றி விட்டதாகத் தோன்றுகிறது. இனி, பாஞ்சாலி சபதத்தைக் கேட்போம்.

வில்லியின் பாஞ்சாலி,

"அரசவையில் எனை ஏற்றி அஞ்சாமல்
துகில்தீண்டி அளகம்தீண்டி
விரைசெய் அளி இனம்படிதார் வேந்தர்எதிர்
தகாதனவே விளம்புவோரை,
பொருசமரில் முடிதுணித்துப் புலால்நாறு
வெங்குருதிபொழிய, வெற்றி
முரசுஅறையும் பொழுதுஅல்லால் விரித்தகுழல்
இனி எடுத்து முடியேன்"

என்று சபதம் செய்கிறாள்.

பாரதியின் பாஞ்சாலி,

"தேவி திரௌபதி சொல்வாள்:— "ஓம்
தேவி பராசக்தி ஆணை உரைத்தேன்;
பாவி துச்சாதனன் செந்நீர்,— அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை இரத்தம்,
மேவி இரண்டும் கலந்து— குழல்
மீதினில் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல்முடிப் பேன்யான்;— இது
செய்யு முன்னே முடியேன்"

என்று சபதம் செய்கிறாள்.

இந்த இரண்டு புலவர்களின் சபதங்களையும், பத்துத் தடவை, கருத்து ஊன்றி, வாய்விட்டு உரக்கச் சொல்லிப் பாருங்கள்! அப்பொழுது தெரியும், புரியும் பாரதியின் கவிதைப் பேராற்றலும், பாஞ்சாலி சபதத்தின் காவிய உயர் தரமும்.

## முடிப்புப் புதுமை

பாரதி பாஞ்சாலி சபதத்தை எப்படி முடிக்கிறான்?

"நாமும்கதையை முடித்தோம்— இந்த
நானிலம் முற்றும் நல்இன்பத்தில் வாழ்க!"

என்று பாரதியின் கதை சொல்லும் புதுமையை நூல் முழுவதிலும் பலபடக் காண்கிறோம். நாம் குழந்தைக்கு அமுதூட்டுவது மாதிரி, பாரதி நமக்குக் கதையை இணக்கமாக, எளிமையாக, இனிமையாக, புதுமையாக ஊட்டுகிறான். இந்தப் புதுமைக்கு மகுடம் சூட்டியது போலிருக்கிறது மேற்கூறிய கதையின் முடிவு. மகுடத்திற்கு மகுடம் சூட்டினது போல் இருக்கிறது "இந்த நானிலம் முற்றும் நல் இன்பத்தில் வாழ்க!" என்று முடித்திருப்பது!

நமது குருமணி — ஜனநாயகக் கலைப்பேராசான் பாரதி, "உலகு இன்புறுவதில் தாம் இன்புற" ஓர் சிறந்த காப்பியம் அருளியுள்ளான், பாஞ்சாலி சபதத்திற்கு நிகர் பாஞ்சாலி சபதம்தான் எந்த அளவுகோலால் அளந்தாலும்.

இன்றைய தமிழன் — வளரும் தமிழன், இதைச் 'சுவை கண்டு துய்த்துத் துய்த்து'த் தனக்கும் உலகத்திற்கும் பயன் படுத்தட்டும்!

('தாமரை', செப்டெம்பர், 1961)

